# எனது நூல்களும் பிரசுரங்களும்.

---

**மனம் போல வாழ்வு—நான்காம் பதிப்பு.** இஃது, இம்மை யின்பத்தையும், மறுமை யின்பத்தையும் அடைவதற்குரிய நெறிகளை மிகத் தெளிவாகக் கூறுகின்ற ஓர் அரிய நூல். இப்பதிப்பு நன்கு சீர்திருத்தப் பெற்றும், ஜேம்ஸ் ஆலன் சரித்திரம் சேர்க்கப் பெற்று முள்ளது. இதன் விலை அணு 8.

**அகமே புறம்—மூன்றாம் பதிப்பு.** இஃது இகத்திலும் பரத்தி லும் மேலான நிலைகளை அடைவதற்குரிய மார்க்கங்களை வரிசைப் படுத்தி மிக இனிமையாகக் கூறுவது. இப் பதிப்பு நன்றாக அழகு படுத்தப் பெற்றும், ஜேம்ஸ் ஆலன் சரித்திரம் சேர்க்கப் பெற்று முள்ளது. இதன் விலை அணு 8.

**வலிமைக்கு மார்க்கம்—இரண்டாம் பதிப்பு.** இது மிக எளிய நிலைமையை எய்தியுள்ளோர் மிக வலிய நிலைமையை எய்துதற்குரிய வழிகளை யாவரும் எளிதில் கைக்கொள்ளத் தக்கவாறு தெளிவாக வும் விரிவாகவும் மிக இனிய தமிழ் நடையில் எழுதப் பெற்றது. இதன் விலை அணு 12.

**சாந்திக்கு மார்க்கம்.** இஃது இல்வாழ்க்கையின் பண்பாகிய அன்பைக் கைக்கொண்டும், துறவு வாழ்க்கைக்குப் பகையாகிய 'யான்' என்பதை விடுத்தும், அதனிடத்தில் கடவுளைக் கொண்டும் ஒழுகி நித்திய சாந்தியாகிய முத்தியை அடையும் நெறியைக் கூறுவது. இதன் விலை அணு 12.

**மெய்யறிவு—மூலமும் உரையும்.** இஃது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கையும், அவற்றை அடையும் வழிகளை யும் பல உவமானங்களோடு மிகச் சுருக்கமாகவும் மிக விளக்கமாக வும் கூறுவது; பல தேசத்து நீதிநூல்களின் சாரம் எனத் தக்கது. இதன் விலை அணு 12.

**மெய்யறம்—அரும்பத உரையுடன்.** இது திருவள்ளுவர் திருக்குறளுக்கு வழிநூல்; மாணவரியல், இல்வாழ்வியல், அரசியல், அந்தணரியல், மெய்யியல் என்னும் ஐந்து இயல்களால், புருஷார்த் தம் நான்கையும் தற்கால இயல்புக்குத் தக்க வேறுபாடுகளோடு கூறு வது. இதன் விலை அணு 8.

# சாந்திக்கு மார்க்கம்.






அன்பின் ஒளிநின் அகத்துட் புகவிடின்,
இன்பம், அமைதி, எழில் சாந்தி—ஒன்றும்.
சுயநயத்தை முற்றும் துறந்துவிடின், என்றும்
பரநயத்தைப் பெற்றுயர்வாய் பார்த்து. முதனூல்

வ. உ. சிதம்பரம் பிள்ளை.

## செய்ந்நன்றி யறிதல்.

என்னை ஆக்கி, அளித்து, இன்னிலையில் வைத்திருக்கின்ற எல்லாம் வல்ல இறைவனுக்கும், என்னைப் பெற்று வளர்த்து எனக்குக் கல்வி பயில்வித்த என் பெற்றோர்களுக்கும், தமிழையும் ஆங்கிலத்தையும் நன்குக் கற்பித்து என்னை மேம்படுத்திய என் ஆசிரியர்களுக்கும் யான் நன்றியறிதலுள்ளவனா யிருக்கிறேன்.

**1908**-ம் வருஷம் ஜூலை மாதம் முதல் **1912**-ம் வருஷம் டிசம்பர் மாதம் முடிய என் மனைவி மக்களுடைய வாழ்க்கைச் செலவுகளுக்கு மாதந்தோறும் ரூபா ஐம்பதுக்கு மேலாகத் தேன் ஆபிரிக்காவிலிருந்து அனுப்பிக் கொண்டிருந்தும், அதற்குப்பின் எனக்குத் தந்திமணியார்டர் மூலமாக முதல் முறை ரூபா ஐந்நூறும், இரண்டாம் முறை ரூபா இரண்டாயிரமும் அனுப்பியும், மூன்றும் முறை ரூபா இரண்டாயிரமும், தங்கக் கைக் கடிகாரம், முதலியனவும் கொண்டுவந்து என்னிடம் நேரில் கொடுத்தும் உதவிய எனது மெய்ச் சகோதரர் தஞ்சை ஜில்லாத் தில்லையாடி திரு. த. வேதியப் பிள்ளை யவர்களுக்கு யான் நன்றி யறிதலுள்ளவனா யிருக்கிறேன். எனது நன்றியறிதலின் ஓர் அடையாளமாக அவர்கள் பெயரை முன்னரே என் இரண்டாவது மகளுக்கு "வேதவல்லி" என்று இட்டுள்ளேன்.

எனது வக்கீல் உத்தியோகத்தை மறுபடியும் அடைய யான் சென்ற 1924-ம் வருஷத்தில் முயற்சித்தபோது சென்னை பெரிய நீதிமன்றத்து நீதிபதிகளுக் கெல்லாம் சிபார்சு செய்து எனக்கு வக்கீல் உத்தியோகம் கிடைக்கும்படி செய்தவரும், அந்நீதிமன்றத்து அக்காலத்து நீதி

பதிகளில் ஒருவரா யிருந்தவரும், பின்னர் உபகாரச் சம்பளம் பெற்று லண்டன் நகரில் வசித்துவருகிறவரு மான ஸ்ரீ. இ. எச். வாலேஸ் அவர்களுக்கு யான் நன்றி யறிதலுள்ளவனு யிருக்கிறேன். என் நன்றியறிதலின் ஓர் அடையாளமாக அவர் பெயரை முன்னரே எனது கடைசி மகனுக்கு "வாலேஸ்வரன்" என்று வைத்துள்ளேன்.

யான் கோவிற்பட்டியை விட்டு இங்கு வந்த 1932-ம் வருஷம் மார்ச்சு மாதம் முதற்கொண்டு என் குடும்பச் செலவுகளுக்கும், என் குடும்ப விசேஷங்களுக்கும், யான் வேண்டிய காலங்களில் யான் வேண்டியாங்குப் பொருள் அளித்தும், யான் வேண்ட நாணிய காலங்களில் என் குறிப்பறிந்து பொருள் அளித்தும், என்னைப் பேணிவரு கின்ற தூத்துக்குடி திரு. அ. சே. சு. கந்தசுவாமி ரெட்டியா ரவர்களுக்கும் அவர்களுடைய ஏகக் குடும்ப மைத்துனர் திரு. அ. சே. சு. முத்தைய ரெட்டியாரவர்களுக்கும் யான் நன்றியறித லுள்ளவனு யிருக்கிறேன்.

எனது நிலைமையை அறிந்து, எனது "சஷ்டி பூர்த்தி நிதி" என்ற பெயரால் ஓர் ஆயிரம் ரூபாவுக்கு மேல் சேர்த்து எனக்குத் தந்துதவிய எனது நண்பரும், சிறந்த தேசாபிமானியும், பெரிய இராஜதந்திரியு மான நமது "தமிழ் நாடு" ஆசிரியர் டாக்டர். பி. வரதராஜுலு நாயுடு அவர்களுக்கும், அவர்கள் விருப்பப்படி அந்நிதிக்குப் பொருள் கொடுத்து உதவிய ஏனைய தேசாபிமான சீலர் களுக்கும் யான் நன்றியறித லுள்ளவனு யிருக்கிறேன்.

வ. உ. சிதம்பரம் பிள்ளை.

## பொருட் குறிப்பு.

" உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்; மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து—திருக்குறள்.

# முகவுரை.

"சாந்திக்கு மார்க்கம்" என்னும் இந்நூல் இங்க்லாந்து தேசம், இல்பிராக் கோம்பி நகர் திரு. ஜேம்ஸ் ஆலன் என்னும் பெரியாருடைய (From Poverty to Power) "எளிமையி லிருந்து வலிமைக்கு" என்னும் ஆங்கில நூலின் இரண்டாம் பாகமாகிய "The Way of Peace" என்பதன் மொழி பெயர்ப்பு.

முதல் நூலின் ஆசிரியர் நமது நாட்டு நூல்களின் ஆங்கில மொழி பெயர்ப்புக்களைக் கற்று, அவற்றின் பொருள்களைக் கடைப்பிடித் தொழுகி, மெய்ஞ் ஞானியாய் வாழ்ந்து வந்தார். அக் காலத்தில் அவர் தாம் கண்ட உண்மைகளை ஏனையோர்களும் கண்டு, ஒழுக்க மேம்பாடடைந்து, மெய்ஞ்ஞானிகளாய்ப் பேரின்பம் பெற்று வாழவேண்டு மென்ற அவாவுடையவராய், ஆங்கில மொழியில் பல நூல்கள் இயற்றி அச்சிட்டு வெளிப்படுத்தினர். அவற்றில் பலவற்றைப் படிக்கும் பாக்கியம்எனக்கு **1905**-ம் வருஷம் கிடைத்தது. அவற்றின் அருமை பெருமைகளைக் கண்டு யான் ஆச்சரியம் அடைந்து, அவற்றை யெல்லாம் தமிழில் மொழிபெயர்த்துத் தமிழ் மக்கள் படிக்கும்படி செய்ய வேண்டு மென்று கருதினேன். உடனே அந்நூல்களில் சிறிய அளவினவாகிய இரண்டு நூல்களை "மனம் போல வாழ்வு", "அகமே புறம்" என்னும் பெயர்களோடு மொழி பெயர்த்து அச்சிட்டு வெளிப்படுத்தினேன். அவற்றைத் தமிழ் மக்கள் மிக விருப்போடு வாங்கிப் படித்ததைக் கண்டு, யான் ஆலனுடைய ஏனைய நூல்களை

யும் தமிழில் மொழிபெயர்க்கத் தொடங்கி, இதன் முதல் நூலின் முதற் பாகமாகிய "The Path of Prosperity" என்பதை "வலிமைக்கு மார்க்கம்" எனவும், இரண்டாம் பாகத்தைச்" சாந்திக்கு மார்க்கம்" எனவும், வேறு இரண்டு நூல்களைப்" பேரின்ப மார்க்கம்", "ஊழை வெல்வதற்கு உபாயம்" எனவும் அரைகுறையாக மொழி பெயர்த்து வைத்தேன். பின்னர் "வலிமைக்கு மார்க்க"த்தைப் பூரண மாக்கி அச்சிட்டு வெளிப்படுத்தினேன். அதனையும் தமிழுல கம் மிக விருப்பத்துடன் ஏற்றது.

கலாசாலைகளுக்குப் பாடப் புத்தகங்கள் விதிக்கும் (Text Book Committee) பாடப்புத்தக சபையார் யான் அச்சிட்டு வெளிப்படுத்திய மேற் கூறிய மூன்று நூல் களையும் பாடப் புத்தகங்களாக ஏற்றுக் கொண்டனர். உடனே இந்நூலைப் பூரணமாக்கி இப்போது அச்சிட்டு வெளியிடுகிறேன். ஏனைய "ஊழை வெல்வதற்கு உபாய"த் தையும், "பேரின்ப மார்க்க"த்தையும் விரைவில் பூரண மாக்கி அச்சிட்டு வெளியிட எத்தனித்துள்ளேன்.

இந்நூல் முதல்நூலின் சரியான மொழிபெயர்ப்பு. முதல் நூலிலுள்ள பாக்களைத் தமிழ்ப் பாக்களாக்கி இந் நூலில் ஆங்காங்குச் சேர்த்துள்ளேன். இந்நூலும், முதல் நூலாசிரியரின் ஏனைய நூல்கள் போன்று, மிக மிக உயர்ந்த இகலோக பரலோகப் பதவிகளை அளிக்க வல்ல மாண்பு வாய்ந்தது. தமிழுலகம் இதனையும் உவகையுடன் வரவேற்கு மென்று நம்புகிறேன். எல்லாம் வல்ல இறைவன் துணை.

தூத்துக்குடி<br>17—7—34 } வ. உ. சிதம்பரம் பிள்ளை.

## காப்பு.

உலகிலுள மக்களேலாம் ஒள்ளறிவு சான்று
வலனோடும் செல்வமோடும் வாழ்ந்து-நலனுறவே
" சாந்திக்கு மார்க்கம்"எனச் சாற்றுமோரு நூலியற்றக்
காந்திக்கு மூலஇறை காப்பு.

---

# சாந்திக்கு மார்க்கம்.

## தியான வலிமை.

ஆத்ம தியானம் கடவுளை அடைவதற்கு மார்க்கம். அது புவியிலிருந்து சுவர்க்கத்திற்கு, பொய்ப்பொருளி லிருந்து மெய்ப்பொருட்கு, துன்பத்திலிருந்து இன்பத்திற் குக்கொண்டுபோகும் சூட்சும ஏணி. ஒவ்வொரு சாதுவும் அவ்வேணியில் ஏறியிருக்கிறான்; ஒவ்வொரு பாவியும் விரை விலோ, தாழ்ப்பிலோ, அவ்வேணிக்கு வரவேண்டும்; தன்னை யும் இவ்வுலகையும் புறக்கணித்து, கடவுளையும் அவருல கையும் நோக்கிச் செல்கின்ற ஒவ்வொரு யாத்திரிகனும் அவ்வேணியின் பொற்படிகளில் தனது பாதங்களை வைத்து ஏறவேண்டும். அதனுடைய உதவியில்லாமல் நீங்கள் கடவுணிலையை, கடவுட்டன்மையை, கடவுளமைதியை அடையமுடியாது; மெய்ப்பொருளின் கலப்பற்ற இன்பத் தையும், மங்காத பெருமையையும் காணமுடியாது.

## சாந்திக்கு மார்க்கம்.

தியானமாவது, ஒரு கொள்கையை அல்லது ஒரு விஷயத்தை முற்றிலும் அறியவேண்டுமென்ற நோக்கத்துடன் ஆழ்ந்து சிந்தித்தல். எதனை நீங்கள் அடிக்கடி தியானித்துக்கொண்டிருக்கிறீர்களோ, அதனை நீங்கள் அறிவது மாத்திரமல்லாமல், அதன் வடிவமாக மேன்மேலும் வளர்ந்துகொண்டிருப்பீர்கள்; ஏனெனில், அஃது உங்கள் உயிரோடு கலந்து உங்கள் உயிரே ஆகிவிடும். ஆதலால், நீங்கள் சுயநயமும் கீழ்மையும் பொருந்திய ஒன்றை அடிக்கடி சிந்தித்துக்கொண்டிருப்பீர்களாயின், நீங்கள் முடிவில் சுயநயத்தர்களாகவும் கீழ்மக்களாகவும் ஆய்விடுவீர்கள்; நீங்கள் பரநயமும் தூய்மையும் பொருந்திய ஒன்றை இடைவிடாது சிந்தித்துக்கொண்டிருப்பீர்களாயின், நீங்கள் நிச்சயமாகப் பரநயத்தர்களாகவும் தூயர்களாகவும் ஆய்விடுவீர்கள்.

நீங்கள் எதைப்பற்றி அடிக்கடி ஆழ்ந்து நினைக்கின்றீர்களோ, வேலையற்ற நேரங்களில் எதனிடத்தில் உங்கள் ஆன்மா இயற்கையாகச் செல்கின்றதோ, அதனை எனக்குச் சொல்லுங்கள்; நீங்கள் எந்தத் துன்ப இடத்திற்கு அல்லது இன்ப இடத்திற்குச் சென்றுகொண்டிருக்கிறீர்கள், நீங்கள் தெய்வவடிவாகவா அல்லது மிருகவடிவாகவா வளர்ந்துகொண்டிருக்கிறீர்கள் என்று உங்களுக்கு நான் சொல்லுகிறேன்.

ஒருவன் எந்தக் குணத்தை அடிக்கடி நினைக்கின்றானோ அந்தக் குணத்தின் எதார்த்த வடிவத்தை அவன் அடையும்படியான விலக்கமுடியாத தன்மை ஏற்படுகின்றது. ஆதலால், உங்கள் தியானப் பொருளை நீங்கள் நினைக்கும் ஒவ்

வொரு சமயத்திலும் உங்களை மேலே உயர்த்தும்படியான விதத்தில் உங்கள் தியானப்பொருள் மேலானதாக இருக்கட்டும்; கீழானதாக இருக்கவேண்டா; சுயநய அம்சம் எதுவும் கலக்காத தூயதாக இருக்கட்டும்; அதற்குத் தக்கபடி உங்கள் ஹிருதயம், அசுத்தமாகிப் பொய்ப்பொருள்பால் இழுக்கப்படாமல், சுத்தமாகி மெய்ப்பொருள்பால் இழுக்கப்படும்.

தியானம் ஆத்மார்த்த வாழ்விற்கும் ஞானத்திற்கும் அடிப்படை. ஒவ்வொரு தீர்க்கதரிசியும், ஞானியும், லோக ரக்ஷகனும் தியான வலிமையாலேயே அவ்வாறுயிருக்கின்றனர். "யான் மெய்ப்பொருள்" என்று சொல்லும் வரையில் புத்தர்பெருமான் மெய்ப்பொருளைத் தியானித்துக் கொண்டிருந்தார். "யானும் என் தந்தையும் ஒருவனே" என்று சொல்லும் வரையில் ஏசுநாதர் கடவுளின் அந்தரியாமித்துவத்தைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தார்.

தெய்வ உண்மைகளை ஆதாரமாகக்கொண்ட தியானமே பிரார்த்தனையின் சாரமும் உயிருமாகும். அது கடவுளிடத்து ஆன்மா மௌனமாகச் சென்று சேர்தலாம். தியானமற்ற (எனக்கு இன்ன இன்ன அருள்க என்று கேட்கும்) மனுப் பிரார்த்தனை உயிரற்ற உடம்பு; அது மனத்தையும் ஹிருதயத்தையும் பாவத்திற்கும் துன்பத்திற்கும் மேலே உயர்த்தும் வலிமை யற்றது. ஞானத்திற்காகவும், மனோ சாந்திக்காகவும், மேலான தூய்மைக்காகவும், பூரண மெய் யுணர்வுக்காகவும் நீங்கள் நாள்தோறும் பிரார்த்தித்துக் கொண்டிருந்தும், நீங்கள் பிரார்த்திக்கும் பொருள் உங்களுக்

குத் தூரத்திலே இருக்குமானுல், நீங்கள் பிரார்த்திப்பது ஒன்றும் நீங்கள் நினைப்பதும் செய்வதும் வேருென்றுமா யிருக்கிறதென்று நீங்கள் தெரிந்துகொள்ளவேண்டும். நீங் கள் அடையவேண்டுமென்று பிரார்த்திக்கிற மாசற்ற உண் மைகளை நீங்கள் அடையவிடாமல் தடுக்கிற சுயநயப் பற்று டைய பொருள்களிலிருந்து உங்கள் மனத்தை அப்புறப் படுத்தி அதன் போக்கில் விடாமல் நிறுத்துவீர்களாயின்; நீங்கள் எதனைப்பெறுவதற்குத் தகுதியற்றவர்களோ அதனை உங்களுக்குச் கொடுக்கும்படியும், நீங்கள் மற்றவர்களிடத் துச் செலுத்தாத அன்பையும் கிருபையையும் உங்களிடத் துச் செலுத்தும்படியும் கடவுளிடத்து நீங்கள் கேளாதிருப் பீர்களாயின்; நீங்கள் எப்பொழுதும் மெய்ப்பொருளின் தன்மையை நினைக்கவும் அநுசரித்து நடக்கவும் தொடங்கு வீர்களாயின்; நீங்கள் அம்மாசற்ற உண்மைகளில் ஐக்கிய மாகும்படியாக நாள்தோறும் வளர்ந்துகொண்டிருப்பீர்கள்.

ஏதேனும் ஒரு லௌகிக இலாபத்தை அடைய விரும்பு கிறவன், அதனை அடைவதற்குச் சுறுசுறுப்பாக வேலை செய்ய விருப்பமுள்ளவனுயிருத்தல் வேண்டும்; தான் விரும் பிய மாத்திரத்தில் அந்த இலாபம் தனக்கு வந்துவிடுமென்று எதிர்பார்த்துக் கைகளைக் கட்டிக்கொண்டு காத்திருக்கின்ற வன் மடையனே யாவன். முயற்சியொன்றும் செய்யாமல் மோக்ஷ உடைமைகளை நீங்கள் அடையக்கூடுமென்று வீணுக எண்ண வேண்டா; மெய்ப்பொருள் இராஜ்யத்தில் நீங்கள் உண்மையாக வேலைசெய்ய ஆரம்பிக்கும்போது மாத்திரம், நீங்கள் மோக்ஷ உடைமைகளை அடைவதற்கு அநுமதிக் கப்படுவீர்கள்; நீஙகள் விரும்பும் ஆத்ம உடமைகளை அடை

வதற்கு நீங்கள் செய்யவேண்டிய வேலைகளைப் பொறுமை யோடும் முணுமுணுக்காமலும் செய்து முடிக்த பொழுது, அவ்வுடைமைகள் உங்களைச் சேரவிடாமல் வைத்திருக்கப் பட மாட்டா.

உங்கள் சொந்தத் திருப்தியை மாத்திரம் நாடாமல், மெய்ப்பொருளை உண்மையாக நாடுவீர்களாயின்; லௌகிக சுகங்களுக்கும் இலாபங்களுக்கும் மேலாக அதனை நீங்கள் நேசிப்பீர்களாயின்; ஆனந்தத்திற்கும் மேலாக அதனை நீங் கள் கோருவீர்களாயின்; அதனை அடைவதற்கு ஆவசியக மான முயற்சியைச் செய்வதற்கு நீங்கள் விருப்பமுள்ளவர் களா யிருப்பீர்கள்.

பாவத்திலிருந்தும் துக்கத்திலிருந்தும் நீங்கள் விடுபடு தற்கு விரும்புவீர்களாயின்; நீங்கள் அடையவேண்டுமென்று பெருமூச்சுவிட்டுப் பிரார்த்திக்கும் மாசற்ற தூய்மையைக் கொள்ள விரும்புவீர்களாயின்; உலக அறிவையும் ஆத்ம ஞானத்தையும் அடையவும், நிலையானதும் ஆழ்ந்ததுமான சாந்தியை அநுபவிக்கவும் விரும்புவீர்களாயின்; இப்பொழுது வந்து தியானமாகிய மார்க்கத்தில் பிரவேசியுங்கள்; உங்கள் தியானத்தின் மேலான பொருளாக மெய்ப்பொருளைக் கொள் ளுங்கள்.

சோம்பலான வீண் எண்ணங்களுக்கும் தியானத்திற் கும் உள்ள வேற்றுமையை ஆரம்பத்தில் அறிந்துகொள்ள வேண்டும். தியானத்தில் சொர்ப்பனமும், அநுபவத்திற்கு எட்டாததும் ஒன்றும் இல்லை. கலப்பும் களங்கமுமற்ற மெய்ப்பொருளைத் தவிர வேறு ஒன்றும் அகத்தின்கண்

இருக்கவிடாமல் செய்வதாகிய தேடுதலும் ஆராய்தலுமான அப்பியாசமே தியானம். இவ்வாறு தியானம் செய்தலால் உங்கள் துர் அபிமானங்களை வளர்க்கமாட்டீர்கள்; ஆனால், நீங்கள் 'யான்' என்பதை மறந்து, மெய்ப்பொருளைத் தேடிக் கொண்டிருக்கிறதாக மாத்திரம் உணர்ந்துகொண்டிருப்பீர்கள். அவ்வாறே, சென்ற காலத்தில் நீங்கள் உங்களைச் சுற்றிக் கட்டியிருக்கிற தீவினை மதில்களை ஒவ்வொன்றாக இடித்து மெய்ப்பொருளைக் காண்டற்குப் பொறுமையோடு காத்துக்கொண்டிருப்பீர்கள்; உங்கள் தீவினை மதில்கள் போதிய அளவு நீக்கப்பட்டபொழுது மெய்ப்பொருட்காட்சி உங்களுக்குக் கிடைக்கும். உங்கள் ஹிருதயம் மௌனமாக அடங்கியிருக்கும் காலையில் பின்வரும் செய்யுளின் பொருளைக் காண்பீர்கள்:—

"நம்மகத் துள்ளே நடுவிடம் ஒன்றுளது;
மெய்ப்பொருள் நிறைந்தவண் விளங்கிநிற் கின்றது;
அதனைச் சுற்றி மதில்மதில் களாகத்
தூல மாமிசம் சூழ்ந்திருக் கின்றது;
அதன்தெளி வான முழுநற் காட்சியை
பொறியின்பப் போர்வை மறைத்துப் பலபல
தீமைக ளெல்லாம் செய்துநிற் கின்றது;
அதனை அறிதல் அகத்திருந் ததனொளி
வெளியே வரும்படி வழியொன்று செய்தலே;
மெய்ப்பொருள் ஒளியை வெளியிற் சென்று
பார்க்க வழிசெயல் பயனில் செயலே."

தியானம் செய்வதற்கு ஒவ்வொரு நாளிலும் ஒரு நேரத்தைக் குறித்துக்கொண்டு, அந்த நேரத்தில் தவறாது தியானம் செய்யுங்கள். ஒவ்வோருயிரும் உறங்கிக்கொண்

டிருக்கும் விடியற்காலம் தியானத்திற்கு மிகமிகப் பொருத்தமான நேரம். எல்லா இயற்கை நிலைமைகளும் அப்பொழுது உங்களுக்கு அனுகூலமா யிருக்கும்; இராக் காலத்தின் நீண்ட உபவாசத்தால் காமக் குரோதாதிகள் அடங்கியிருக்கும்; முதல்நாட் கிளர்ச்சிகளும் தொந்தரவுகளும் ஒழிந்து போயிருக்கும்; மனமானது பலத்தோடும் அமைதியோடும் ஆத்மார்த்த போதனையை ஏற்றுக்கொள்ளத் தக்கதாயிருக்கும். நீங்கள் செய்யவேண்டிய முதல் வேலைகளில் ஒன்று உங்களுடைய சோம்பலையும் உறக்கத்தையும் ஒழித்து விடுதல்; அது செய்ய நீங்கள் மறுப்பீர்களாயின், நீங்கள் மேற்செல்ல அசக்தர்களா யிருப்பீர்கள்; ஏனெனில், ஆத்மாவின் வேண்டுதல்கள் தவறுமல் நிறைவேற்றப்படல் வேண்டும்.

ஆத்மா விழித்திருத்தற்கு மனமும் சரீரமும் விழித்திருத்தல் வேண்டும். சோம்பேறியும் சுகபோகியும் மெய்ப்பொருள் ஞானத்தை அடைய முடியாது. எவன் ஆரோக்கியமும் பலமும் உடையவனு யிருந்தும், சப்தம் இல்லாத அருமையான காலை நேரங்களைச் சோம்பலான உறக்கத்தில் கழிக்கிறுனே அவன் உயர்ந்த மோக்ஷ ஸ்தானங்களுக்கு ஏறுவதற்குச் சிறிதும் தகுதி யில்லாதவன்.

எவன் தனது விழித்திருக்கிற அறிவினுல் ஆகக்கூடிய உயர்ந்த காரியங்களை அறிந்திருக்கிறுனே,எவன் உலகத்தை மூடிக்கொண்டிருக்கிற அஞ்ஞானத்தைப் போக்குவதற்கு தொடங்கியிருக்கிறுனே, அவன் நக்ஷத்திரங்களின் ஒளி மழுங்குவதற்கு முன்னே எழுந்திருந்து விழியாத மனிதர்

கள் களுக் கண்டுகொண்டிருக்கும் போது, தன்னுடைய ஆத்மாவைச் சூழ்ந்துள்ள (அஞ்ஞானமாகிய) இருளோடு போராடி நிர்மலமான கோரிக்கையால் மெய்ப்பொருளின் ஒளியைக் காண்டற்கு முயலுகிறான்.

"பெரியார் அடைந்துள பீடார் நிலைகள்
ஒருநாள் முயற்சியால் ஒன்றியவை யல்ல;
பலநாள் பிறர்கள் படுத்துறங் குங்கால்
இரவில் முயன்றதால் எய்திய வைகளே''.

அதிகாலையில் எழுந்திராத ஒரு சாது, ஒரு பக்தன், ஒரு மெய்ப்பொருளாசிரியன் (இவ்வுலகில்) இருந்திருப்ப தில்லை. தூய சிந்தனை செய்வதற்காக ஏசுநாதர் வழக்கமாக அதிகாலையில் எழுந்து, தனித்த மலைகளின்மேல் ஏறிச் சென்றார். புத்தர்பிரான் எந்நாளும் சூரிய உதயத்திற்கு ஒரு மணி நேரத்திற்கு முன்னரே எழுந்து தியானம்செய்து வந்தார்; அவருடைய சீடர்களெல்லாம் அவ்வாறே செய்யும் படி கட்டளை யிடப்பட்டார்கள்.

உங்களுடைய தினசரி வேலைகளை நீங்கள் அதிகாலை யில் தொடங்க வேண்டியதிருப்பதால், நீங்கள் நாள்தோறும் அதிகாலையில் தியானம் செய்ய முடியாதவர்களாயிருப்பின், இராத்திரி காலத்தில் ஒரு மணி நேரம் தியானம் செய்ய முயலுங்கள். உங்கள் தினசரி வேலையின் நீட்சியாலும் கஷ்டத்தாலும் நீங்கள் இராத்திரிகாலத்திலும் தியானம் செய்ய முடியாதவர்களா யிருப்பின், அதற்காக நீங்கள் அதைரியப் படவேண்டா; ஏனெனில், உங்கள் வேலையில்

கிடைக்கும் இடைவேளைகளிலாவது, நீங்கள் இப்பொழுது காரியமில்லாமல் கழிக்கும் சில சோம்பல் நிமிஷங்களிலாவது, உங்கள் நினைப்புக்களை மேம்படுத்திப் பரிசுத்தமான தியானத்திற்குத் திருப்பலாம்; உங்கள் வேலைகள் நீண்டகாலப் பழக்கத்தால் இயற்கையாக நிகழும் தன்மையன வாயிருந்தால், நீங்கள் அந்த வேலைகளைச் செய்துகொண்டிருக்கும் நேரத்திலேயே தியானம் செய்யலாம். புகழ்பெற்ற கிறிஸ்தவ சாதுவும் தத்துவ ஞானியுமாகிய யாக்கப் போகிம் என்பவர் நெடு நேரம் செருப்புத் தைத்துக்கொண்டிருந்த போதே தெய்வப் பொருள்களைப் பற்றிய தமது அகன்ற ஞானத்தை அடைந்தார். ஒவ்வொரு வேலையிலும் நினைப்பதற்கு நேரம் உண்டு; மிக மிக அதிகமாக வேலை செய்கிறவருக்கும், மிக மிகக் கஷ்டத்துடன் வேலைசெய்கிறவருக்கும் தியானம செய்யவும் பிரார்த்தனை செய்யவும் நேரம் இல்லாமற் போகாது.

ஆத்ம தியானமும் தன்னைத் திருத்தலும் ஒன்றினின்று ஒன்று பிரிக்கப்பட முடியாதவை; ஆதலால், உங்களை அறிவதற்காக நீங்கள் உங்களைப்பற்றி ஊக்கமாகத் தியானம் செய்யத் தொடங்குங்கள்; நீங்கள் மெய்ப்பொருளைக் காண்பதற்கு உங்களிடத்துள்ள குற்றங்களை யெல்லாம் அடியோடு நீக்குதலே உங்களுடைய முக்கிய நோக்கமாக இருத்தல் வேண்டு மென்பதை நீங்கள் நன்றாக ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய நோக்கங்களையும் நினைப்புக்களையும்,செயல்களையும் கவனித்து, அவற்றை உங்களுடைய கோட்பாட்டுடன் ஒப்பிட்டு, அவை அதற்குப்

பொருத்தமானவையா என்று அமைதியான பக்ஷபாதமற்ற பார்வையோடு பார்த்து ஆராயத் தொடங்குங்கள். இவ்வாறு செய்வதனல் மனச் சமாதானத்தையும் ஆத்ம சமாதானத்தையும் தொடர்ச்சியாகவும், அதிகமாகவும் அடைந்துகொண்டிருப்பீர்கள். அச் சமாதானங்கள் இல்லாமல், மனிதர்கள் வாழ்க்கையாகிய சமுத்திரத்தில் உதவியற்ற துரும்புகளா யிருக்கிருர்கள். நீங்கள் வெறுப்புக்கு அல்லது வெகுளிக்கு அடிமைகளா யிருப்பின், உங்கள் குரூர நடக்கையையும் மூட நடக்கையையும் நீங்கள் உணரும்படியான விதத்தில் அன்பையும், பொறுமையையும் பற்றித் தியானியுங்கள். பின்னர், நீங்கள் அன்பையும், பொறுமையையும், மன்னித்தலையும் பற்றிய நினைப்புக்களில் சஞ்சரிக்கத் தொடங்குவீர்கள்; நீங்கள் உயர்ந்த குணங்களைக் கொண்டு தாழ்ந்த குணங்களை ஒழித்த காலையில், அன்பாகிய தெய்வச் சட்டத்தின் ஞானம், அதற்கும் உங்கள் வாழ்க்கையினுடையவும் ஒழுக்கத்தினுடையவும் சிக்கல்களுக்கு முள்ள சம்பந்தத்தைப் பற்றிய அறிவுடன், உங்கள் ஹிருதயத்தில் மௌனமாகப் புகுந்து அதனை நாளடைவில் கவர்ந்து கொள்ளும். இந்த ஞானத்தை உங்களுடைய ஒவ்வொரு நினைப்பிலும், சொல்லிலும், செயலிலும் உபயோகிப்பீர்களாயின், நீங்கள் மிக மிகப் பொறுமையுள்ளவர்களாகவும், மிக மிக அன்புள்ளவர்களாகவும், மிக மிகத் தெய்வத் தன்மையுள்ளவர்களாகவும் வளர்வீர்கள். இவ்வாருக ஒவ்வொரு குற்றத்தையும், ஒவ்வொரு சுயநய ஆசையையும், ஒவ்வொரு கெட்ட பழக்கத்தையும் தியானத்தின் வலிமையால் ஒழித்துவிடலாம்; ஒவ்வொரு பாவமும், ஒவ்வொரு

குற்றமும் உங்கள் அகத்தைவிட்டு வெளியேற்றப்பட்டபின், மெய்ப்பொருள் விளக்கு மிகத் தெளிவாகவும் பூரணமாகவும் யாத்திரிக ஆத்மாவைப் பிரகாசிப்பிக்கும்.

இவ்வாறாகத் தியானிக்கையில், உங்களுடைய ஒரே உண்மை விரோதியாகிய, உங்கள் சுயநய, அநித்திய, ஜீவனுக்கு விரோதமாக நீங்கள் இடைவிடாமல் உங்களைப் பலப்படுத்திக் கொண்டிருப்பீர்கள்; மெய்ப்பொருளினின்று பிரிக்கமுடியாத, தெய்வத் தன்மையும் அழிவில்லாமையும் பொருந்திய ஆத்மாவில் உங்களை மேலும் மேலும் உறுதியாக நிலைப்படுத்திக்கொள்வீர்கள். உங்கள் தியானங்களின் நேரான பயன் ஓர் அமைதியான தெய்வ பலம்; அஃது உங்கள் வாழ்க்கைப் போராட்டத்தில் நீங்கள் நிற்பதற்கும் தங்கியிருப்பதற்கு முரிய இடமாகும். தூய நினைப்பின் வெல்லும் வலிமை மிகப் பெரியது; மௌனமான தியான காலத்தில் அடைந்த பலமும் ஞானமும் யுத்த காலத்திலும், துக்க காலத்திலும், துர்க்கிரியை செய்ய மனம் எழும் காலத்திலும், தப்பித்துக் கொள்ளக்கூடிய தைரியத்தையும் ஞாபகத்தையும் ஆத்மாவுக்குக் கொடுக்கும்.

தியான பலத்தால் நீங்கள் ஞானத்தில் வளரும்போது அசைவனவும், நிலையற்றனவும், துக்கத்தையும் துன்பத்தையும் தருவனவு மாகிய உங்கள் சுயநய அவாக்களை மிக அதிகமாக விட்டுவிடுவீர்கள்; என்றும் மாறுதலுறாத தத்துவங்களை ஆதாரமாகக் கொண்டு, நீங்கள் வளரும் நம்பிக்கையோடும் உறுதியோடும் மோக்ஷ அமைதியை அடைவீர்கள்.

# சாந்திக்கு மார்க்கம்.

தியானத்தின் பிரயோஜனம் நித்திய தத்துவங்களின் ஞானத்தை அடைதல்; தியானத்திலிருந்து உண்டாகும் பலம் அத் தத்துவங்களை நம்பி ஆதாரமாகக் கொள்ளும் வலிமையை அடைந்து, அவ்வாறே நித்தியப் பொருளோடு ஐக்கியமாதல். தியானத்தின் முடிவாவது மெய்ப்பொருளின், கடவுளின், நேரான ஞானத்தை அடைதலும், தெய்வ நித்திய சாந்தியை அடைதலுமாம்.

உங்களுடைய தியானங்கள் நீங்கள் இப்பொழுது கொண்டுள்ள ஒழுக்க நிலையிலிருந்து எழட்டும். உறுதியான விடாமுயற்சியால் நீங்கள் மெய்ப்பொருளாக வளர வேண்டியதிருக்கிறதென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள் நீங்கள் வைதிகக் கிறிஸ்தவர்களாயிருந்தால், ஏசுநாதரின் மாசற்ற தூய்மையையும், அவரது ஒழுக்கத்தின் தெய்வ மேம்பாட்டையும் பற்றி இடைவிடாது தியானியுங்கள்; அவருடைய பூரணத்துவத்தை மேன்மேலும் அடைவதற்காக நீங்கள் அவருடைய ஒவ்வோர் உபதேசத்தையும் உங்கள் அகவாழ்க்கையிலும் புறவாழ்க்கையிலும் உபயோகியுங்கள். மெய்ப்பொருட் சட்டத்தைப்பற்றித் தியானிப்பதற்கும், தம்முடைய ஆசிரியருடைய உபதேசங்களை அப்பியாசத்தில் கொண்டுவருவதற்கும் மறுத்துக்கொண்டு, வெறுமனே தமது மதங்களைப்பற்றிக்கொண்டும் தமது மதத் தெய்வத்தைத் தொழுதுகொண்டும், இடை விடாது பாவங்களைச் செய்து துன்பத்தை அநுபவித்துக்கொண்டும் இருக்கிற போலி மதத்தினர்களைப்போல இராதீர்கள்; அரைகுறைத் தெய்வங்களையும் கக்ஷிப்பிரதிகக்ஷிமதங்களையும்

சுயநயத்தோடு பற்றிக்கொண்டிருத்தலை விட்டு, செத்த சடங்குகளையும் உயிரற்ற அஞ்ஞானத்தையும் கடந்து, தியான பலத்தால் மேற்செல்ல முயலுங்கள். இவ்வாருக, மாசற்ற மெய்ப்பொருளிடத்து மனத்தை நிறுத்திக்கொண்டு, ஞானமாகிய உயர்ந்த வழியில் நடப்பீர்களாயின், மெய்ப் பொருளை அடைதலினும் தாழ்ந்த இடம் ஒன்றையும் காண மாட்டீர்கள்.

எவன் ஊக்கத்தோடு தியானம் செய்கிருனே, அவன் முதலில் ஓர் உண்மையைத் தூரத்தில் காண்கிருன்; பின்னர் தினந்தோறும்செய்யும் தியானத்தால் அதனை அடைகிருன்; மெய்ப்பொருளின் உபதேசப்படி நடக்கிறவன் மாத்திரம் மெய்ப் பொருளின் மதத்தை அறியக்கூடும்; தூய நினைப்பால் மெய்ப்பொருளைக் கண்டபோதிலும், தியான அப்பியாசத் தால் மாத்திரமே மெய்ப்பொருளாதல் கூடும்.

தெய்வத் தன்மை வாய்ந்த கௌதம புத்தர் "எவன் வாழ்க்கையின் உண்மையான நோக்கத்தை மறந்து சிற்றின் பத்தில் மனத்தைச் செலுத்தி, வீண் பெருமை பாராட்டிக் கொண்டு, தியானம் செய்யாமல் இருக்கிருனே, அவன் கால அளவில் தியானத்தில் முயன்று கொண்டிருந்த மனிதனைப் பார்த்துப் பொருமைப்படுவான்" என்று சொன்னர். அவர் தமது சீடர்களுக்குப் பின்வரும் ஐந்து பெரிய தியானங்களையும் உபதேசித்தார்.

"முதல் தியானம் அன்பைப்பற்றிய தியானம்; அஃதாவது, உங்கள் விரோதிகளுடைய க்ஷேமம் உள்பட

எல்லா உயிர்களுடைய க்ஷேமத்தையும் நன்மையையும் நீங்கள் விரும்பும் படியான விதத்தில் உங்கள் அகத்தைச் சீர்படுத்தி வைத்துக் கொள்ளுதல்."

இரண்டாவது தியானம் இரக்கத்தைப் பற்றிய தியானம்; அஃதாவது, எல்லா உயிர்களிடத்தும் உங்களுக்கு ஆழ்ந்த இரக்கம் உண்டாகும்படியான விதத்தில் அவ்வுயிர்களெல்லாம கஷ்டப்பட்டுக் கொண்டிருத்தலை நினைத்து அவ்வுயிர்களுடைய கவலைகளையும் துக்கங்களையும் தெளிவாக மனோபாவனை செய்தல்."

"மூன்றாவது தியானம் சந்தோஷத்தைப் பற்றிய தியானம்; அஃதாவது, நீங்கள் மற்றவர்களுடைய சம்பத்தை நினைத்து, அவர்கள் சந்தோஷங்களுடன் நீங்களும் சந்தோஷித்தல்".

"நான்காவது தியானம் அசுத்தத்தைப் பற்றிய தியானம்; அஃதாவது, அயோக்கியதையின் தீய பலன்களையும், பாவத்தினுடையவும் வியாதியினுடையவும் பயன்களையும், நிமிஷத்தில் கழியக்கூடிய சிற்றின்பம் எவ்வளவு அற்பமானதென்பதையும், அதன் விளைவுகள் எவ்வளவு ஆபத்தை விளைக்கக்கூடியவை யென்பதையும் சிந்தித்தல்."

"ஐந்தாவது தியானம் சாந்தியைப் பற்றிய தியானம்; அஃதாவது, நீங்கள் விருப்பு வெறுப்புகளுக்கும், வருந்துதல் வருத்துதல்களுக்கும், செல்வம் வறுமைகளுக்கும் மேற்பட்டு, உங்கள் ஊழைப் பக்ஷபாதமற்ற அமைதியோடும் பூரண சமாதானத்தோடும் ஏற்றுக்கொள்ளுதல்."

## தியான வலிமை.

இத் தியானங்களைச் செய்து புத்தராதுசிடர்கள் மெய்ப் பொருள் ஞானத்தை அடைந்தார்கள். ஆனால் மெய்ப் பொருள் உங்களுடைய இலட்சியமாயிருக்கும் வரையில், குற்றமற்ற வாழ்க்கையும் தூய மனமுமுடைய ஒழுக்சத் திற்காக நீங்கள் தாகமும் பசியும் கொண்டிருக்கும்வரையில், இத் தியானங்களை நீங்கள் செய்தாலும், செய்யாவிட்டாலும் பெரிதன்று. ஆகையால், உங்கள் தியானங்களில் உங்கள் ஹிருதயம் சகல காமத்திலிருந்தும், குரோதத்திலிருந்தும், குற்றங்காண்டலிலிருந்தும் விடுபட்டு, அது பிரபஞ்சம் முழுவதையும் உள்ளூர்ந்த அருளோடு தழுவும்வரையில், எப்பொழுதும் அகன்றுகொண்டிருக்கிற அன்போடு வளர்ந்து விரியட்டும். காலை ஒளியைப் பெறுவதற்காக அரும் பானது தனது இதழ்களைத் திறப்பதுபோல, மெய்ப்பொரு ளின் பெருமை வாய்ந்த ஒளியைப் பெறுவதற்காக உங்கள் ஆத்மாவை அதிகமாகத் திறப்பீர்களாக; கோரிக்கையாகிய சிறகுகளைக் கொண்டு மேல் நோக்கிப் பறப்பீர்களாக; அச்சம் இல்லாமல் இருப்பீர்களாக. மிகமிக உயர்ந்தவற்றை அடையலாமென்று நம்புவீர்களாக; ஒரு பூரண இனிய வாழ்க்கையை அடையக்கூடுமென்று நம்புவீர்களாக; ஒரு மாசற்ற தூய வாழ்க்கையை அடையக் கூடுமென்று நம்பு வீர்களாக; ஒரு பூரண பக்தி வாழ்க்கையை அடையக் கூடு மென்று நம்புவீர்களாக; மேலான மெய்ப்பொருளை அடை யக்கூடுமென்று நம்புவீர்களாக. இவ்வாறு எவன் நம்பு கிறானோ, அவன் மோக்ஷ மலையின்மீது விரைவாக ஏறுகிறான்; இவ்வாறு நம்பாதவர்கள் மேக இருள்படிந்

துள்ள நரகப் பள்ளத்தாக்கில் மயக்கத்தோடும் துன்பத்தோடும் அலைந்து திரிந்து கொண்டிருக்கிறார்கள்.

அவ்வாறு நம்புவதால், அவ்வாறு கோருவதால், அவ்வாறு தியானிப்பதால், உங்கள் ஆத்ம அநுபவங்கள் தெய்வ இனிமையும் அழகு முள்ளனவா யிருக்கும்; உங்கள் பார்வையைப் பரவசப்படுத்தும் காட்சிகள் பெருமை வாய்ந்தனவா யிருக்கும். தெய்வ அன்பை, தெய்வ நீதியை, தெய்வப் பரிசுத்தத்தை அல்லது கடவுளை, நீங்கள் அடையும் காலையில் உங்கள் இன்பம் பெரியதாகவும், உங்கள் சாந்தி ஆழ்ந்ததாகவும் இருக்கும்; பழைய பொருள்கள் நீங்கி விடும்; எல்லாம் புதியனவாய் விடும். பொய்ப் பொருளைப் பார்க்கும் கண்ணுக்கு உரத்ததாகவும் ஊடுருவிச்செல்லவிடாததாகவும், மெய்ப்பொருளைப் பார்க்கும் கண்ணுக்கு மெல்லியதாகவும் ஊடுருவிச் செல்லவிடுவதாகவும் இருக்கிற ஸ்தூலப் பிரபஞ்சத்தின் திரையானது உயர்த்தப்பட்டு, சூட்சுமப் பிரபஞ்சம் காட்டப்படும். காலத்திற்கு முடிவுண்டு; நீங்கள் முடிவில்லாமல் என்ஞான்றும் வாழ்வீர்கள். மாற்றமும் மரணமும் இனிமேல் உங்களுக்குக் கவலையையும் துக்கத்தையும் கொடுக்கமாட்டா; ஏனெனில், நீங்கள் மாறுதல் இல்லாத பொருளை அடைந்து, மரணம் இல்லாத பொருளின் ஹிருதயத்தில் வாழ்ந்து கொண்டிருப்பீர்கள்.

## ஞான மீன்.

விஷ்ணு மூர்த்தியும், கிருஷ்ண சுவாமியும்,
புத்த தேவரும், கிறிஸ்து நாதரும்,
பிறந்தநன் மீனே ! பிறங்குமீன் இலாத
நடுராத் திரியின் நள்ளிருள் தன்னில்
நினதொளி காணும் மனமொடு வானை
நோக்கி யிருந்த நண்ணறி வாளர்க் (கு)
ஒழுக்கத் தவர்வாழ் உலகத்தி னின்று
சின்மய வுருவுடை தேவ தூதனும்,
காமக் குரோதக் களத்திடை கடவுளும்
பிறக்கும் கதையைச் சிறக்கச் சொல்வோனும்,
களைத்தனைந் துழன்று கவலுமாந் தர்க்கு
பரித்திராக் கத்தினைப் பாடுபா வலனும்
வருவதை மொழிந்து மகிழ்ச்சியை நல்கினை;
ஒளிர்பல பொருள்களுள் ஒளிமிகு மீனே
நீமறு படியும் நிசிநடு ராத்திரி
அழகுறும் படியா அலங்கரித் தருளினை;
சமயங்க ளின்புறச் சடங்குக ளோடும்,
உயிரும் பயனும் ஒன்றும் இலாத
கைசெய் விக்கிர கங்க ளோடும்,
பாவங் களின்தீப் பலன்க ளோடும்,
எதிர்த்துப்போ ராடி இளைத்து மெலிந்து

## சாந்திக்கு மார்க்கம்.

மதத்தின் இருளில் வருந்திநின் றொளியை
நாடி நிற்கும் நல்லறி வாளர்க் (கு)
உற்சா கத்தினை யூட்டி யருளினை;
நின்னை நினைந்து நிற்போர் நெஞ்சுள்
பழைய உண்மைகள் தழையச் செய்தனை;
அவரது தளர்ச்சிகள் அழிவுறச் செய்தனை;
அவரது நெறியில் அழகொளி பரப்பினை!
நின்பால் அன்பு நிகழ்த்து வோர்க்கு
துக்கத்தி னின்று தோன்றும் சுகத்தையும்
சந்தோ ஷத்தையும் சாந்தத் தினையும்
கொள்ளும் நெறியைக் கூறி யருளினை;
இராக்கா லத்தில் இளைக்க அலைந்து
நின்னைக் காண்போர் நிதமின் புறுவர்.
நின்னுயர் ஒளியின் நிகரிலா வலியால்
அகத்துள் என்றும் ஆழ்ந்த அன்பு
நிலைக்கப் பெற்றோர் நிதமின் புறுவர்.
விஷ்ணு மூர்த்தியும், கிருஷ்ண சுவாமியும்,
புத்த தேவரும், கிறிஸ்து நாதரும்
பாரில் பிறந்த பழையநன் மீனே!
நினதுபா டத்தை நெஞ்சொடு கற்பேம்;
பணிவொடும் மகிழ்வொடும் பத்தியொடும் கற்பேம்;
அறிவொடும் பொறையொடும் அறிந்துநிற் பேமே.

## இரண்டு தலைவர்—யானும் கடவுளும்.

மனித ஆன்மாவின் அமர்க் களத்தில் அகத்தின் ஆள் கைக்காகவும் அரசுக்காகவும், ஆதிபத்திய கிரீடத்திற் காகவும் இரண்டு தலைவர் அமர் புரிகின்றனர். "அவரில் ஒருவன் 'யான்' என்னும் தலைவன்; "இவ்வுலக அரசன்" என்றும் சொல்லப்படுவன்; மற்றொருவன் மெய்ப்பொருள் என்னும் தலைவன்; தந்தையாகிய கடவுள் என்றும் சொல்லப் படுவன். 'யான்' என்னும் தலைவன் காமம், கர்வம், பேராசை, வீண்பெருமை, பிடிவாதம் என்னும் இருட் கருவிகளைக் கைக்கொண்டு கலகம் விளைப்பவன்; மெய்ப் பொருள் என்னும் தலைவன் இனிமை, பொறுமை, தூய்மை, தியாகம், பணிவு, அன்பு என்னும் ஒளிக் கருவிகளைக் கைக்கொண்டு அமைதியாகவும் அடக்கமாகவும் இருப்பவன்.

ஒவ்வோர் ஆன்மாவிலும் அமர் செய்யப்படுகின்றது; ஒரு வீரன் ஒரு சமயத்தில் எதிரெதிரான இரண்டு படை

களில் நின்று சண்டை செய்ய முடியாததுபோல, ஒவ்வோர் அகமும் ஒரு சமயத்தில் 'யான்' என்னும் தலைவனுடைய படையிலாவது, மெய்ப்பொருள் என்னும் தலைவனுடைய படையிலாவது சேர்ந்திருக்கின்றது. அவனுக்குப் பாதி இவனுக்குப் பாதி என்பது கிடையாது; 'யான்' என்னும் தலைவனும் இருக்கிறான்; மெய்ப்பொருள் என்னும்தலைவனும் இருக்கிறான்; 'யான்' இருக்கிற இடத்தில் மெய்ப்பொருள் இல்லை; மெய்ப்பொருள் இருக்கிற இடத்தில் 'யான்' இல்லை. இவ்வாறு மெய்ப்பொரு ளாசிரியராகிய புத்தர் கூறியிருக்கின்றனர். கிறிஸ்துவின் அவதாரமாகத் தோன்றிய ஏசுநாதர் "எந்த மனிதனும் இரண்டு தலைவரிடம் வேலைபார்க்க முடியாது; ஏனென்றால், அவன் ஒருவனை வெறுப்பான்; மற்றொருவனை நேசிப்பான்; அல்லது ஒருவனைப் பற்றிக் கொள்வான்; மற்றொருவனை விட்டு விடுவான். நீ கடவுளுக்கும் பிசாசுக்கும் ஊழியம் செய்ய முடியாது" என்று கூறியிருக்கின்றனர்.

மெய்ப்பொருள் சிக்கல், மாறுதல், குறைதல் இவற்றிற்கு இடம் கொடாத எளிமையும், நேர்மையும், கண்டிப்பும் வாய்ந்தது; 'யான்' என்பவன் சாதுரியமும், கோணலும், தந்திரமும், வஞ்சகம்பொருந்திய அவாக்களும் உடையவன்; முடிவற்ற மாறுதல்களுக்கும் குறைதல்களுக்கும் இடம் கொடுக்கிறவன். 'யான்' என்பவனை மதிமயங்கி வணங்குகிறவர்கள் ஒரே சமயத்தில் ஒவ்வோர் உலக அவாவையும் திருப்தி செய்து கொள்ளலாம் என்றும், மெய்ப்பொருளை அடையலாம் என்றும் வீணாக நினைக்கின்ற

னர். ஆனால், மெய்ப்பொருளை நேசிக்கின்றவர்கள் 'யான்' என்பதை விடுத்து மெய்ப்பொருளை வணங்குகின்றார்கள்; அவர்கள் உலக விஷயங்களினின்றும், உலக இன்பங்களி னின்றும், தங்களைக் காத்துக்கொள்ளுகிறார்கள். நீங்கள் மெய்ப்பொருளை அறிதற்கும் அடைதற்கும் விரும்புகின்றீர் களா? அப்படியானால், நீங்கள் தியாகம் செய்வதற்கும் முற்றத் துறத்தற்கும் தயாராய் இருத்தல் வேண்டும். ஏனெனில், 'யான்' என்பதன் கடைசி அடையாளமும் காணமற்போன பொழுது, மெய்ப்பொருளை அதனுடைய எல்லா மகிமையோடும் காணலாம்.

நித்திய கிறிஸ்து நாதர் தம்முடைய சீடன் ஆவதற்கு விரும்புகிறவன் "ஒவ்வொரு நாளும் 'யான்' என்பதை மறுக்கவேண்டும்" என்று சொன்னார். நீங்கள் 'யான்' என்பதை மறுப்பதற்கும், உங்களுடைய காமங்களையும், உங்களுடைய குரோதங்களையும், உங்களுடைய அபிப்பிரா யங்களையும் விட்டு விடுவதற்கும் விரும்புகின்றீர்களா? அப்படியானால், நீங்கள் மெய்ப்பொருளின் சுருங்கிய வழியில் பிரவேசித்து, உலகத்தார் அடையாத சாந்தியை அடைய லாம். 'யான்' என்பதை முற்றும் மறுத்தலும், முற்றும் அழித்தலும், மெய்ப்பொருளின் பூரண நிலை; சகல மதங்களும், சகல தத்துவ சாஸ்திரங்களும் இந்த மேலான நிலையை அடைவதற்குரிய பல துணைகள்.

'யான்' என்றால் மெய்ப்பொருள் இல்லை யென்றல். மெய்ப்பொருள் என்றல் 'யான்' இல்லை என்றல். நீங்கள் 'யான்' என்பது இறக்கும்படி விடுங் காலையில், நீங்கள்

மறுபடியும் மெய்ப்பொருளாக அவதரிக்கின்றீர்கள். நீங்கள் 'யான்' என்பதைப் பற்றிக்கொண்டிருக்கும் காலையில், உங்களினின்று மெய்ப்பொருள் மறைக்கப்பட்டிருக்கும்.

நீங்கள் 'யான்' என்பதைப் பற்றிக்கொண்டிருக்கும் காலையில், உங்கள் மார்க்கத்தில் ஓயாத கஷ்டங்கள் நேர்ந்து கொண்டிருக்கும்; துன்பங்களும், துக்கங்களும், ஆசாபங்கங்களும் நீங்கள் அடையும் பலன்களாயிருக்கும். மெய்ப்பொருளிடத்துக் கஷ்டங்கள் இல்லை; நீங்கள் மெய்ப்பொருளைச் சேர்ந்தால், நீங்கள் சகல துக்கத்தினின்றும் ஆசாபங்கத்தினின்றும் விடுபடுவீர்கள்.

மெய்ப்பொருள் தன் இயற்கையில் மறைபட்டிருப்பதன்று; இருளன்று. அஃது எப்பொழுதும் விளங்கிக் கொண்டும், பூரணமாக ஒளிர்ந்துகொண்டும் இருக்கிறது. ஆனால், வழிதப்பிய குருட்டு 'யான்' அதனைக் காண முடியாது. பகலின் ஒளி குருடர் தவிர, மற்றவர்களுக்கு மறைக்கப்பட்டிருப்பதில்லை; மெய்ப் பொருளின் ஒளி 'யான்' என்னும் அகங்காரத்தால் குருடராய் இருக்கிறவர் தவிர, மற்றவர்களுக்கு மறைக்கப்பட்டிருக்கவில்லை.

மெய்ப்பொருள் பிரபஞ்சத்தில் ஓர் உண்மைப் பொருள், உள்ளூர்ந்த சமாதானம், பூரண நீதி, நித்திய அன்பு. எதனையும் அதனோடு சேர்க்க முடியாது; அதிலிருந்து எடுக்க முடியாது. அஃது எந்த மனிதனையும் சார்ந்திருக்கவில்லை; ஆனால், அதனை எல்லா மனிதரும் சார்ந்திருக்கின்றனர்.

## இரண்டு தலைவர்.

நீங்கள் 'யான்' என்னும் கண்கள் மூலமாகப் பார்த்துக்கொண்டிருக்கும் காலத்தில், நீங்கள் மெய்ப்பொருளின் அழகைக் காண முடியாது. நீங்கள் வீண் பெருமைக்காரர்களாயிருப்பின், நீங்கள் ஒவ்வொன்றையும் உங்களுடைய சொந்த வீண் பெருமையாகிய வர்ணத்தைப் பூசிக் காண்பீர்கள்; நீங்கள் காமிகளாயிருந்தால், உங்களுடைய அகமும் மனமும் காமப் புகையாலும் சுடர்களாலும் மூடப்பட்டிருக்கும்; அவற்றின் மூலமாக ஒவ்வொன்றும் விகாரப்பட்டுத் தோன்றும்; நீங்கள் கர்வம் உள்ளவர்களாகவும், உங்கள் அபிப்பிராயமே சரி என்று கொள்கிறவர்களாகவும் இருந்தால், உங்கள் அபிப்பிராயங்களின் பெருமையையும் சிறப்பையும் தவிர வேறு ஒன்றையும் பிரபஞ்சம் முழுவதிலும் நீங்கள் பார்க்க மாட்டீர்கள்.

'யான்' என்னும் மனிதனிலிருந்து மெய்ப்பொருளின் மனிதனை வேறு பிரித்துக் காட்டுகிற குணம் ஒன்று உண்டு; அது பணிவு. வீண் பெருமையிலிருந்தும், பிடிவாதத்திலிருந்தும், அகங்காரத்திலிருந்தும் விடுபட்டிருத்தல் மாத்திரமல்லாமல், தம்முடைய சொந்த அபிப்பிராயங்களை விலையற்றனவாகக் கருதுதலுமே உண்மையான பணிவு.

எவன் 'யான்' என்னும் அகங்காரத்தில் அமிழ்ந்திருக்கிறானோ, அவன் தனது சொந்த அபிப்பிராயங்களை மெய்ப்பொருள் என்றும், பிறரது அபிப்பிராயங்களைப் பொய்ப்பொருள் என்றும் மதிக்கிறான். ஆனால், மெய்ப்பொருளுக்கும் தனது சொந்த அபிப்பிராயத்துக்கும் உள்ள வேற்றுமையைக் காணுதற்குக் கற்றுக்கொண்ட மெய்ப்

பொருளின் அன்பன், எல்லா மனிதர்களையும் தயாளம் என்னும் கண்ணால் பார்க்கிறான்; பிறருடைய அபிப்பிராயங் களுக்கு விரோதமாகத் தன்னுடைய அபிப்பிராயங்களை நிலைநாட்ட முயலமாட்டான்; தான் அதிகமாக நேசிக்கிற தன் அபிப்பிராயங்களை விட்டுக்கொடுத்து, மெய்ப் பொருளின் தன்மையைக் காட்டுவிப்பான். ஏனென்றால், மெய்ப்பொருள் இயற்கையில் இன்ன தன்மையதென்று சொல்ல முடியாததாகவும், அநுபவித்து மாத்திரம் உணரத் தக்கதாகவும் இருக்கிறது. எவன் அதிகமாகத் தயாளத் தைக் கொண்டிருக்கிறானோ, அவன் அதிகமாக மெய்ப் பொருளைக் கொண்டிருக்கிறான்.

மனிதர் சூடான தர்க்கங்களைச் செய்துகொண்டு தாம் மெய்ப்பொருளை ஸ்தாபிக்கிறது போல மூடத்தனமாக நினைக்கின்றனர்; அப்பொழுது உண்மையில் அவர் தம் முடைய சொந்த அற்ப விருப்பங்களையும், அழிந்துபோகும் அபிப்பிராயங்களையும் ஸ்தாபிக்கின்றனர். 'யான்' என் பதைப் பின்பற்றுகிறவன் மற்றவர்களோடு சண்டை செய்வதற்காக ஆயுதங்களை எடுக்கிறான். மெய்ப்பொருளைப் பின்பற்றுகிறவன் தன்னோடு சண்டை செய்வதற்காக ஆயுதங்களை எடுக்கிறான். மெய்ப்பொருள் மாறுதல் இல்லாத தாயும், அழிவு இல்லாததாயும் இருக்கிறபடியால், அஃது உங்கள் அபிப்பிராயத்துக்கும் என் அபிப்பிராயத்துக்கும் வேறாக இருக்கிறது. நாம் அதனுள் பிரவேசிக்கலாம்; அல்லது நாம அதற்கு வெளியே இருக்கலாம்; ஆனால், நம்முடைய எதிர்ப்பும் நம்முடைய காப்பும் மிகை; அவை நம்மீது திருப்பி எறியப்படுகின்றன.

# இரண்டு தலைவர்.

மாந்தர் 'யான்' என்பதால் அடிமைப்படுத்தப்பட்டுக் கோபம், வீண்பெருமை, பிறர்மீது குற்றஞ் சாட்டல், முதலிய துர்க் குணங்களுடையவர்களாய்த் தம்முடைய சொந்த மதம் மாத்திரம் உண்மை மதம் என்றும், மற்றவர்களுடைய மதங்கள் பொய் மதங்கள் என்றும் நம்புகின்றனர். அவர் மிக ஆத்திரத்தோடு ஜனங்களைத் தமது மதத்தில் சேர்க்கின்றனர். மெய்ப்பொருள் மதமாகிய ஒரே ஒரு மதம் தான் உண்டு. 'யான்' என்னும் பிராந்தியாகிய ஒரே ஒரு பிராந்திதான் உண்டு. மெய்ப்பொருள் ஒரு வெறு நம்பிக்கை அன்று; அது சுயநயமற்ற, தூய்மையான, ஆசிப்புள்ள ஓர் அகம். எவன் மெய்ப்பொருளைப்பற்றி நிற்கின்றானோ, அவன் எல்லாரோடும் சமாதானமாய் வாழ்கிறான்; எல்லாரையும் அன்பு நினைப்புக்களால் போஷிக்கிறான்.

நீங்கள் உங்களுடைய மனத்தையும், அகத்தையும் நடத்தையையும் மௌனமாக ஆராய்வீர்களாயின், நீங்கள் மெய்ப்பொருளின் மக்களா, அல்லது 'யான்' என்பவனை வணங்குகிறவர்களா என்பதை நீங்கள் எளிதாகத் தெரிந்து கொள்ளலாம்; நீங்கள் ஐயம், பகைமை, பொறாமை, காமம், வீண்பெருமை, முதலியவற்றின் நினைப்புக்களை ஒளித்து வைத்திருக்கிறீர்களா? அல்லது நீங்கள் இத்தீய நினைப்புக்களுக்கு விரோதமாக ஊக்கத்தோடு போராடுகின்றீர்களா? நீங்கள் முன் சொல்லியவர்களாயின், நீங்கள் எந்த மதத்தை அநுசரிப்பவர்களாயிருப்பினும், நீங்கள் 'யான்' என்பதோடு கட்டப்பட்டிருக்கிறீர்கள்; நீங்கள் பின் சொல்லியவர்களாயின், நீங்கள் வெளிப்படையாக ஒரு

மதத்தையும் அநுசரியாதவர்களா யிருப்பினும், நீங்கள் மெய்ப்பொருளைக் கோருகிற மாணுக்கர்கள். நீங்கள் காமக் குரோதமுள்ளவர்களா, மனம்போன போக்கில் போகிற வர்களா, சுய காரியங்களையே எப்பொழுதும் நாடிக்கொண் டிருக்கிறவர்களா, பொறியின்பங்களை நுகர்கின்றவர்களா, 'யான்' என்று அகங்கரிக்கின்றவர்களா? அல்லது நீங்கள் சாந்த முள்ளவர்களா, அமரிக்கை யுள்ளவர்களா, பரநய முள்ளவர்களா, ஒவ்வொரு வகைப் பொறியின்பத்தையும் நீத்தவர்களா, உங்களுக்குச் சொந்தமானதை விட்டுவிடச் சித்தமா யிருக்கிறீர்களா? நீங்கள் முந்தியவர்களாயின், உங்களுக்கு எஜமான் 'யான்'; நீங்கள் பிந்தியவர்களாயின் நீங்கள் நேசிக்கும் பொருள் மெய்ப்பொருள். நீங்கள் ஐஸ் வரியங்களை அடைய முயல்கின்றீர்களா? நீங்கள் உங்கள் கக்ஷிக்காரர்களுக்காக ஆத்திரத்துடன் சண்டை போடுகின் றீர்களா? நீங்கள் செல்வாக்குக்கும் தலைமைக்கும் அவாவு கின்றீர்களா? நீங்கள் டம்பத்திற்கும் தற்புகழ்ச்சிக்கும் இடம் கொடுத்திருக்கின்றீர்களா? அல்லது நீங்கள் ஐஸ்வரி யங்களின் ஆசையைத் துறந்து விட்டீர்களா? நீங்கள் எல்லாச் சண்டைகளையும் விட்டுவிட்டீர்களா? நீங்கள் மிக மிகத் தாழ்ந்த இடத்தில் இருத்தலிலும், பிறரால் புறக் கணிக்கப்படுதலிலும் திருப்தியடைகின்றீர்களா? நீங்கள் உங்களைப்பற்றிப் பேசுதலையும், உங்களைப் பெருமை உடை யவர்களாக மதித்தலையும் நிறுத்திவிட்டீர்களா? நீங்கள் முந்தியவர்களாயின், நீங்கள் கடவுளை வணங்குகிறதாக நினைத்துக்கொண்டிருந்தாலும், உங்கள் அகத்தின் கடவுள் 'யான்' தான். நீங்கள் பிந்தியவர்களாயின், நீங்கள் கடவுளைத்

துதியாதவர்களா யிருப்பினும், நீங்கள் மிக மிக மேலான பொருளுடன் (கடவுளுடன்) வசித்துக்கொண்டிருக்கின்றீர்கள்.

மெய்ப்பொருளின் அன்பனைத் தெரிந்துகொள்ளுதற்குரிய அடையாளங்கள் தெளிவானவை. அவற்றை ஸ்ரீ கிருஷ்ணபகவான் "பகவத் கீதை" யில் பின்வருமாறு கூறுகிறார்:—

"அறிவினை அடைதற் கநு தினம் முயறல்,
ஒருவினை குறிக்கோள், உயிர்க்கூறு செயாமை,
அடங்கிய பசிகள், அஞ்சாமை, ஈகை,
அடக்கம், கடவுள்பால் அன்புநன் னேர்மை,
மெய்ம்மை கூறுதல், வெகுளிகொள் ளாமை,
மற்றையோர் பெரிதா மதிப்பவர்க் களித்தல்,
இன்பம் துன்பம் இரண்டினும் சமநிலை,
பிறர்குறை காணுப் பெருமை, இரக்கம்,
ஆசை களினல் அசைக்கப் படாமை,
மெல்லிய தன்மை, மேம்பா டுடைமை,
பொறுமை, தூய்மை, உறுதி யுடைமை,
தீங்குசெய் தார்க்கெதிர்த் தீங்குசெய் யாமை,
இவைஅறி குறிகள் எம்இள அரசே!
மெய்ப்பொருள் வழியில் மேவிநிற் போர்க்கே."

மாந்தர் பொய்ப்பொருளாகிய 'யான்' என்பதன் தப்பு வழியில் சென்று தமது தெய்வப் பிறப்பையும், பக்தித் தன்மையையும், மெய்ப்பொருளையும் மறந்தபொழுது, ஒருவரை ஒருவர் மதிப்பதற்குக் கற்பனையான வகுப்புக்களை

ஏற்படுத்தி, மெய்ப்பொருளை உணர்தற்குத் தமது சொந்த மதத்தை அங்கீகரித்துப் பற்றிக் கொள்ளுகின்றனர். அதனால் மாந்தர் ஒருவருக்கொருவர் விரோதமாகப் பிரிக்கப்பட்டு, இடைவிடாத பகைமையும் சண்டையும், முடிவில்லாத துன்பமும் துக்கமும் நிகழ்ந்துகொண்டிருக்கின்றன.

வாசகர்களே! நீங்கள் மெய்ப்பொருளை அடைதற்கு நாடுகின்றீர்களா? அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. 'யான்' என்பது இறக்கட்டும்; நீங்கள் இதுவரையில் விடாமல் பற்றிக்கொண்டிருந்த அவாக்களும், பசிகளும், விருப்பங்களும், அபிப்பிராயங்களும், சுருங்கிய எண்ணங்களும், துவேஷங்களும், உங்களிடத்திலிருந்து நீங்கட்டும்; அவை இனிமேல் ஒருபொழுதும் உங்களை அடிமைப்படுத்தாமல் இருக்கட்டும்; அப்பொழுது மெய்ப்பொருள் உங்களுடையதா யிருக்கும். உங்களுடைய மதம் மற்றைய எல்லா மதங்களினும் மேலானதென்று கருதுவதை நிறுத்தி, தயாளமாகிய மேலான பாடத்தைப் படிப்பதற்குப் பணிவோடு முயலுங்கள். சண்டையையும், துக்கத்தையும் உண்டு பண்ணுவதாகிய நீங்கள் வணங்குகிற இரக்ஷகரே உண்மையான இரக்ஷகர்; உங்களுடைய சகோதரர்கள் உங்களைப் போலவே உண்மையோடும் ஊக்கத்தோடும் வணங்குகிற இரக்ஷகர் பொய்யான இரக்ஷகர் என்னும் கொள்கையை உடனே விட்டு விடுங்கள். ஆனால், நீங்கள் பக்தி நெறியை ஊக்கத்தோடு நாடுங்கள்; பின்னர், ஒவ்வொரு பக்தனும் மனித சமூகத்தின் இரக்ஷகன் என்று காண்பீர்கள்.

'யான்' என்பதை விடுதல் புறப்பொருள்களைத் துறத்தல் மாத்திரம் அன்று; அஃது அகப் பாவத்தையும், அகப் பொய்யையும் துறத்தலுமாம். வீணான உடைகளை விடுதலால், செல்வங்களைத் துறத்தலால், சில உணவுகளை மறுத்தலால், மெதுவான வார்த்தைகளைப் பேசுதலால், இத்தகைய காரியங்களைச் செய்தலால் மெய்ப்பொருளைக் காண முடியாது. ஆனால், வீண் பெருமையை விடுதலால், செல்வங்களின் அவாவைத் துறத்தலால், பொறியின்பங்களின் ஆசையை அடக்குதலால், சகல வெறுப்புக்களையும், சண்டைகளையும், குற்றம் காண்டலையும், சுயநயத்தையும் விடுதலால், அகத்தில் சாந்தத்தையும் தூய்மையையும் கொள்வதால், இத்தகைய காரியங்களைச் செய்தலால் மெய்ப்பொருள் காணப்படுகிறது. பிந்திச் சொன்னவற்றைச் செய்யாது, முந்திச் சொன்னவற்றைச் செய்தல் கள்ளத்தனமும், வெளிவேஷமுமாகும். ஏனெனில், பிந்திச் சொன்னவற்றில் முந்திச் சொல்லியவை அடங்கி யிருக்கின்றன. நீங்கள் வெளிஉலகத்தைத் துறந்து, ஒரு காட்டின் மத்தியில் அல்லது ஒரு குகையின் உள்ளே தனித்திருக்கலாம்; ஆனால், உங்கள் சுயநயத்தை உங்களுடன் வைத்துக்கொண்டே யிருப்பீர்கள்; அதனை நீங்கள் துறந்தால் ஒழிய, உங்களுடைய துர்ப்பாக்கியம் பெரிதாகவும், உங்களுடைய பிரமை ஆழ்ந்ததாகவும் இருக்கும். நீங்கள் இப்பொழுது எந்த இடத்தில் இருக்கிறீர்களோ, அந்த இடத்திலேயே இருந்து உங்கள் கடமைகளை யெல்லாம் செய்துகொண் டிருக்கலாம்; அப்படியிருந்தும், உங்கள் அகப்பகையாகிய உலகப்பற்றை நீங்கள் துறக்கலாம். உலகத்தில் இருந்து கொண்டே உலகப்பற்

றில்லாதிருத்தல், மிகமிக உயர்ந்த பூரணத்துவம்; மிகமிக இன்பகரமான சாந்தி; மிகமிக உயர்ந்த வெற்றியை அடைவதற்கு வழி, 'யான்' என்பதைத் துறத்தல் மெய்ப்பொருளுக்கு வழி. ஆதலால்,

> " அவ்வழி செல்லுக; அவாப்போல் துன்பிலே;
> வெறுப்பின் துயரிலே; பொறிபோல் கரவிலே,
> அவ்வழி செல்லுக; அருமிகை யொன்றை
> விடுத்தோன் நடந்தான் வெகுதூரம் தானே."

'யான்' என்பதை நீங்கள் வெல்லும் காலையில், பல பொருள்களையும், அவற்றில் ஒன்றிற் கொன்றுள்ள சம்பந்தங்களையும் நீங்கள் காணத் தொடங்குவீர்கள். எவன் காமத்தால் அல்லது குரோதத்தால், விருப்பு அல்லது வெறுப்பால் ஆளப்படுகிறானோ, அவன் ஒவ்வொன்றையும் தனது அத்தன்மையோடு பொருத்திக்கொண்டு தனது சொந்தப் பிராந்திகளைப் பார்க்கிறான். எவன் சகல காமத்தினின்றும், குரோதத்தினின்றும், பக்ஷத்தினின்றும், பக்ஷபாதத்தினின்றும் பூரணமாக விடுபட்டிருக்கிறானோ, அவன் தன்னைத் தான் இருக்கிறபடியே பார்க்கிறான்; மற்றவர்களையும் அவர்கள் இருக்கிறபடியே பார்க்கிறான்; எல்லாப் பொருள்களையும், அவற்றின் சரியான அளவுகளையும், சரியான சம்பந்தா சம்பந்தங்களையும் பார்க்கிறான். தான் தாக்குவதற்கு எதுவும், காப்பதற்கு எதுவும், பேணுவதற்குரிய உரிமை எதுவும் இல்லாதபடியால், அவன் சாந்தியாய் இருக்கிறான். அவன் மெய்ப்பொருளின் பூரண சாமானியத் தன்மையை அடைந்துவிட்டான்; ஏனெனில்,

மனத்தினுடையவும் அகத்தினுடையவும் பக்ஷபாதமற்ற, அமைதியான, இன்பகரமான நிலைமையே மெய்ப் பொருளின் நிலைமை. எவன் அந்த நிலைமையை அடைகிறானோ, அவன் தேவ தூதர்களோடு வசிக்கிறான்; பரம் பொருளின் பாத பீடத்தில் இருக்கிறான். பெரிய சட்டத்தை தெரிந்துகொண்ட பின்னர்; துக்கத்தின் மூலத்தைத் தெரிந்துகொண்ட பின்னர்; துன்பத்தின் மர்மத்தைத் தெரிந்துகொண்ட பின்னர்; மெய்ப்பொருள் வீட்டின் வழியைத் தெரிந்துகொண்ட பின்னர்; ஒருவன் எவ்வாறு சண்டையில் அல்லது குற்றங்காண்டலில் ஈடு படுவான்? குருட்டுத்தனமாகச் சுயநயமே நாடும் உலகமானது, தன்னுடைய சொந்தப் பிராந்திகளின் மேகங்களால் சூழப் பட்டு, பொய்யினுடையவும், 'யான்' என்பதனுடையவும் இருளால் மூடப்பட்டு, மெய்ப்பொருளின் நேரிய ஒளியைப் பார்க்க முடியாதென்பதையும், 'யான்' என்பது இறந்த, அல்லது இறந்துகொண்டிருக்கிற, அகத்தின் பூரண சாமானியத் தன்மையை ஒரு சிறிதும் உணரமுடியா தென்பதையும் அவன் அறிவான். அப்படி யிருந்தாலும், துன்பத்தைக் கொடுக்கிற காலமானது துக்கமலைகளை ஒன்றன்மீ தொன்றாக அடுக்கியபொழுது, அம் மலைகளால் நசுக்கி அமிழ்த்தப்பட்ட உலக உயிரானது அதனுடைய முடிவான அடைக்கல இடத்திற்கு ஓடும் என்பதையும், அக்காலம் முடிந்தபின் ஒவ்வோர் உயிரும் மெய்ப்பொருள்பால் வந்து சேரும் என்பதையும் அவன் அறிவான். ஆதலால், அவன் எல்லாரிடத்திலும் நல்விருப்பங் கொண்டு, நெறி தப்பிய

மக்களிடத்துத் தந்தை காட்டும் உருக்கமான இரக்கத்தோடு எல்லாரையும் பார்க்கிறான்.

மாந்தர் மெய்ப்பொருளை உணரமுடியாது; ஏனெனில், அவர் 'யான்' என்பதைப் பற்றிக்கொண்டிருக்கின்றனர்; ஏனெனில், அவர் 'யான்' என்பதை உண்மை யென்று நம்பி நேசிக்கின்றனர்; ஏனெனில், அவர் வெறும் பிராந்தி யாகிய 'யான்' என்பதே உண்மையான பொருளென்று நம்புகின்றனர்.

'யான்' என்பதை நீங்கள் நம்புதலையும் நேசித்தலையும் நிறுத்திய பொழுது, நீங்கள் அதனைவிட்டு மெய்ப்பொருள் பால் ஓடுவீர்கள்; நித்தியமான உண்மையைக் காண்பீர்கள்.

மனிதர்கள் போகம், இன்பம், வீண்பெருமை என்னும் மதுக்களால் வெறி கொண்டிருக்கும் பொழுது, தாம் நெடு நாள் உயிர்வாழ வேண்டுமென்ற தாகம் அவர்களுக்குள் ஆழ்ந்து வளர்ந்து, தாம் ஸ்தூல சரீரங்களோடு நித்தியமாக வாழலாமென்ற கனவுகளால் தாமே தம்மை ஏமாற்று கின்றார்கள். ஆனால், அவர்கள் விதைத்த வினைகளின் விளைவுகளை அறுக்கத் தொடங்கும்போது, துன்பமும், துக்கமும் வந்து சேர்கின்றன; அப்போது, அவர்கள் அவற்றால் நசுக்குண்டும் தாழ்த்தப்பட்டும், 'யான்' என்பதையும், 'யான்' என்பதன் வெறிகள் எல்லாவற்றை யும் துறந்து, அவர்கள் நோகிற அகங்களோடு என்றும் அழியாததாகவும், எல்லாப் பிராந்திகளையும் அழிப்ப தாகவும் இருக்கிற நித்தியமான மெய்ப்பொருள்பால் வந்து சேர்கின்றார்கள்.

## இரண்டு தலைவர்.

மாந்தர் தீமையிலிருந்து நன்மைக்கும், 'யான்' என்பதிலிருந்து மெய்ப்பொருளுக்கும், துக்கமாகிய இருட்டு வாயில் வழியாகச் செல்கின்றனர்; ஏனெனில், துக்கமும், 'யான்' என்பதும் ஒன்றில் நின்று ஒன்று பிரிக்கப்பட முடியாதவை. மெய்ப்பொருளின் அமைதியிலும் ஆனந்தத்திலும் மாத்திரம் எல்லாத் துக்கங்களும் நீங்குகின்றன. நீங்கள் நெடுங்காலமாக வளர்த்துவந்த விருப்பங்கள் நிறைவேறாமல் போன காரணத்தால், அல்லது நீங்கள் எதிர்பார்த்தபடி ஒருவர் நடந்துகொள்ளாத காரணத்தால் நீங்கள் ஆசாபங்கம் அடைவீர்களாயின், அதற்குக் காரணம் நீங்கள் 'யான்' என்பதைப் பற்றிக்கொண்டிருத்தலே. நீங்கள் உங்கள் நடத்தைக்காக இரங்குவீர்களாயின், அதற்குக் காரணம் நீங்கள் 'யான்' என்பதற்கு இடம் கொடுத்திருப்பதே. ஒருவன் உங்கள்பால் நடந்துகொள்ளும் தன்மையிலிருந்து நீங்கள் மனஸ்தாபமும் மனவருத்தமும் அடைவீர்களாயின், அதற்குக் காரணம் நீங்கள் 'யான்' என்பதை வளர்த்துக்கொண்டு வருவதே. பிறன் ஒருவன் உங்களுக்குச் செய்த செயலால், அல்லது உங்களைப்பற்றிச் சொல்லிய சொல்லால் நீங்கள் துன்புறுவீர்களாயின், அதற்குக் காரணம் நீங்கள் 'யான்' என்பதன் துன்பகரமான வழியில் நடந்துகொண்டிருத்தலே. எல்லாத் துன்பங்களும் 'யான்' என்பதற்குச் சொந்தமானவை. எல்லாத் துன்பங்களும் மெய்ப்பொருளில் முடிவு அடைகின்றன. நீங்கள் மெய்ப்பொருளில் பிரவேசித்து மெய்ப்பொருளை அடைந்தபொழுது, ஆசாபங்கமும், அவமானமும், மனவருத்தமும்

அடையமாட்டீர்கள்; துக்கம் உங்களிடத்திலிருந்து பறந்து போய்விடும்.

> 'யான்' ஆன்மாவை அடைக்கும் சிறையே;
> கதவைத் திறக்கும் காவலன் கடவுளே;
> அவன் அழைக்கும்போழ் தவன்பின் செல்லுக;
> அவன்நெறி இருளிற் செலினுமொளி சேர்க்குமே.

உலகத்தின் துக்கமானது அது தன்னாலேயே விளைவித்துக் கொள்ளப்பட்டது. துக்கம் ஆன்மாவைச் சுத்தப்படுத்தி ஆழப்படுத்துகின்றது; துக்கத்தின் ஈறு மெய்ப்பொருளின் முதல்.

நீங்கள் அதிகமாகத் துன்பப் பட்டிருக்கிறீர்களா? நீங்கள் ஆழமாகத் துக்கம் அனுபவித் திருக்கிறீர்களா? நீங்கள் வாழ்க்கையின் பிரசினைகளைப்பற்றி ஆத்திரத்தோடு சிந்தித் திருக்கிறீர்களா? ஆம் என்றால், நீங்கள் 'யான்' என்பதனோடு அமர் செய்வதற்கும், மெய்ப்பொருளின் மாணாக்கன் ஆவதற்கும் தகுதி உடையவர்கள்.

'யான்' என்பதனை விடுவதற்குரிய அவசியத்தைக் காணாத அறிவிலி, பிரபஞ்சத்தைப்பற்றி முடிவில்லாத கோட்பாடுகளை உண்டாக்கி, அவற்றை மெய்ப்பொருள் என்று சொல்லுகிறான்; ஆனால், நல்லொழுக்கத்தைக் கொண்டு அவ்வொழுக்க நெறியில் நேரே ஒழுகுங்கள்; ஒரு நாளும் மாறாததும், கோட்பாட்டில் அடங்காததுமான மெய்ப்பொருளை நீங்கள் காண்பீர்கள். உங்கள் அகத்தில் மெய்யாகிய பயிரைச் செய்யுங்கள்; அதற்குச் சுயநய மற்ற

## இரண்டு தலைவர்.

அன்பும் ஆழ்ந்துணர்ந்த இரக்கமுமாகிய நீரை இடைவிடாது பாய்ச்சுங்கள்; அதில் அன்போடு பொருந்தாத நினைப்புக் களும் உணர்ச்சிகளுமாகிய பறவைகள் விழாதபடி காத்து வாருங்கள்; உங்களுக்குத் திமை செய்தார்க்கு நன்மை செய்யுங்கள்; உங்களை வெறுத்தார்பால் அன்பு பாராட்டுங் கள்; உங்களைக் கடினமாக நடத்துகிறவர்களை இதமாக நடத்துங்கள்; உங்களைத் தாக்கியபொழுது மௌனமாக இருங்கள்; அவ்வாறே உங்கள் சுயநய விருப்பங்களை யெல்லாம் அன்பாகிய சுத்தத் தங்கமாக மாற்றுங்கள்; 'யான்' என்பது மெய்ப்பொருளில் மறைந்து போம். பின்னர், நீங்கள் அடக்கமாகிய தெய்வ உடையால் உடுத்தப்பெற்று, பணிவாகிய எரில் பூட்டப்பெற்று, குற்றமற்றவர்களாய் மனிதர்களுள் நடப்பீர்கள்.

> மெலிந்தசோ தரனே! மெய்ப்பொரு ளிறைபால்
> முயற்சியும் சண்டையும் முடிவடைந் திடுங்காண்.
> மெய்ப்பொரு ளுடைய மென்புனல் விரும்பி
> 'யான்' எனும் பாலையில் ஏன்செல் கின்றாய்?
>
> மறம்புரிந் தலையுநின் வழியுள துயிரின்
> இன்பநீ ரோடையோ டன்பார் பசுநிலம்;
> வந்திளைப் பாறு; கண்டிடு தலைகடை;
> தேடுவோன் *படுவோன்; காண்போன் ‡ படுவோன்.
>
> நின்னுடை இறைவன் செல்லொணு மலையலன்;
> காற்றில் பறக்கும கானலில் வாழ்கிலன்:
> தளர்வினை யளிக்கும் மணலார் வழிகளில்
> அவன்மந் திரவூற் றறிந்திடாய் நீயே.

*படுவோன்—தேடப்படுவோன். ‡ படுவோன்—காணப்படுவோன்.

## சாந்திக்கு மார்க்கம்.

நின்னுடை அரசன் பொன்னடிச் சுவட்டினை
'யான்' எனும் பாலையில் தேடுதல் விடுவாய்.
அவன்சொலின் இனிமையை அவாவுறின் கேட்க;
பிறரது வெற்றுரை செவிகொளாய் நீயே.

அழியிடம் விடுவாய்; அனைத்தும் துறப்பாய்;
விரும்பிய வெல்லாம் விட்டொழிந்தவனாய்,
உள்ளுள கோவிலுள் பொள்ளெனச் சென்றிடு;
தூயன், பரமன், மாறிலான் அங்குளன்.

மௌன அகத்துள் வாழ்கிறான் அவன்தான்;
மறமும், துக்கமும், வருந்தி அலைதலும்
நீத்து)அவன் ஆனந்த நீரில் மூழ்குவாய்;
உன்னுயிர் வேண்டுவ உரைப்பான் அவனே.

மெலிந்தசோ தரனே! விடுஅமர் முயற்சி;
காண்பாய் சாந்தியைக் கடவுளின் அகத்தே.
'யான்' எனும் பாலையில் அலைதலை நிறுத்தி
வந்துன் மெய்ப்பொருள் வண்புனல் பருகுவாய்.

## ஆன்ம வலிமையை அடைதல்.

இன்பத்தையும் உற்சாகத்தையும் புதுமையையும் நாடுகிற, எப்பொழுதும் நகைத்தற்கோ அழுதற்கோ நாடுகிற, பலத்தையும் நிலைப்பையும் வலிமையையும் நாடாத, ஆனால் பலஹீனத்தைப் பின்பற்றித் தம்மிடமுள்ள பலத்தைத் தொலைப்பதில் ஈடுபட்டிருக்கிற, ஆடவரும் மகளிரும் உலகத்தில் நிறைந்திருக்கின்றனர்.

உண்மையான வலிமையையும் செல்வாக்கையுமுடைய ஆடவரும் மகளிரும் சிலரே; ஏனெனில், வலிமையை அடைவதற்கு அவசியமான தியாகத்தைச் செய்தற்குச் சிலரே தயாரா யிருக்கின்றனர்; பொறுமையோடு ஒழுக்கத்தை வளர்ப்பதற்குத் தயாரா யிருக்கிறவர் அவரினும் சிலரே.

உங்களுடைய நிலையற்ற நினைப்புக்களாலும் மனோ வெழுச்சிகளாலும் ஆளப்படுதல், நீங்கள் பலஹீனமாயும் வலிமையற்றும் இருத்தற்கே; அச் சக்திகளைச் சரியாக அடக்கியாள்தல் நீங்கள் பலமாயும் வலிமையுற்றும் இருத்தற்கே. பலத்த மிருகக் காமக் குரோதங்களை யுடைய மனிதர் மூர்க்கத்தனத்தைக் கொண்டிருக்கின்றனர்; ஆனால், அது வ்லிமை யன்று. அங்கு வலிமையின் தாதுக்கள்

இருக்கின்றன; ஆனால், உயர்ந்த அறிவைக்கொண்டு மூர்க்கத்தனத்தைப் பழக்கிக் கீழ்ப்படுத்திய போதுதான் உண்மையான வலிமை ஆரம்பமாகின்றது; அறிவினுடையவும் ஞானத்தினுடையவும் உயர்ந்த நிலைகளைத் தாம் அடைந்த போதுதான் மனிதர் வலிமையுடையவராகக்கூடும்.

ஒரு பலஹீனனுக்கும் ஒரு பலவானுக்குமுள்ள வித்தியாசம் அவருடைய விருப்பத்தின் பலத்தைப் பொறுத்ததன்று; (ஏனெனில், பிடிவாதமுள்ள மனிதன் வழக்கமாகப் பலஹீனனும் மடையனும் இருக்கிறான்.) ஆனால், அவருடைய அறிவுடைமையின் நிலைமைகளைக் காட்டும் மனச் சான்றின் கூர்மையைப் பொறுத்தது.

இன்பத்தை நாடுகின்றவர்களும், உற்சாகத்தை நேசிக்கின்றவர்களும், புதுமையின்பின் செல்கின்றவர்களும், மனோவெழுச்சிக்கும் மனோவுணர்ச்சிக்கும் ஆளாகின்றவர்களும், சமாதானத்தையும், உறுதிப்பாட்டையும், செல்வாக்கையும் கொடுக்கும் கொள்கைகளைப்பற்றிய அறிவில்லாதவர்களா யிருக்கிறார்கள்.

தன் மனோவெழுச்சிகளையும் சுயநய விருப்பங்களையும் தடுத்து, தன்னுள்ளிருக்கிற மிக உயர்ந்ததும் மிக அமைதி வாய்ந்ததுமான தன் அறிவை ஆதாரமாகக் கொண்டு, ஒரு கொள்கையை உறுதியாகக் கடைப்பிடித்து ஒழுகத் தொடங்குங் காலையில் ஒரு மனிதன் வலிமையை வளர்க்க ஆரம்பிக்கிறான்.

## ஆன்ம வலிமையை அடைதல்.

தன்னறிவில் மாருத—தத்துவங்களைக் காண்டல் மிக மிக உயர்ந்த வலிமையை உடனே அடைவதற்கு ஆதாரமும் மருமமும் ஆகும்.

அதிகமாகத் தேடிய பின்னும், துன்பப்பட்ட பின்னும், தியாகஞ் செய்த பின்னும் நித்தியப் பொருளின் ஒளி ஆன்மா மீது வீசும்போது, ஒரு தெய்வ அமைதி உண்டாகின்றது; சொல்ல முடியாத பேரின்பம் ஹிருதயத்தை மகிழ்விக் கின்றது.

அத்தகைய நித்தியப் பொருளை எவன் கண்டானே, அவன் அலைந்து திரிதலை விட்டுச் சமாதானமாகவும், தன்னை அடக்கி யாண்டு கொண்டும் இருக்கிறுன். அவன் "காமக் குரோதங்களுக்கு அடிமையாயிருத்தலை" விட்டு, விதியாகிய கோவிலை எஜமானுயிருந்து கட்டுகிறுன்.

ஒரு கொள்கையாலல்லாமல், தன்னுல் ஆளப்படுகிற மனிதன், தனது சுய நய சௌகரியங்களுக்கு அபாயம் வரும்போது முதுகு காட்டி ஓடுகிறுன். தனது சுய நன்மை களைக் காப்பதற்கும், அவற்றிற்குக் கேடுவராமல் தடுப்ப தற்கும், ஆழ்ந்த எண்ணமுடையவனு யிருக்கிறபடியால், அவன் அதற்கு உதவும் எல்லா வழிகளையும் நியாயமான வழிகளென்று கருதுகிறுன். தனக்குத் தானே சத்துரு வென்பதைக் காணமுடியாத விதத்தில் தன்னையே மிகமிகப் பற்றிக்கொண்டிருக்கிற படியால், அவன் தனது விரோதிக ளிடமிருந்து தன்னை எப்படிப் பாதுகாத்துக் கொள்ளலா மென்று இடைவிடாது சதியாலோசனை செய்துகொண்டிருக்

கிறான். அத்தகைய மனிதனுடைய வேலை தூள் தூளாகப் போகின்றது; ஏனெனில், அது மெய்ப்பொருளினின்றும் வலிமையினின்றும் பிரிக்கப்பட்டிருக்கின்றது. தன்னை அடிப்படையாகக் கொண்டிருக்கிற முயற்சிகளெல்லாம் நாசம் அடைகின்றன; அழிக்க முடியாத ஒரு கொள்கையை அடிப்படையாகக் கொண்டிருக்கிற வேலை மாத்திரம் நிலை நிற்கின்றது.

ஒரு கொள்கையைக் கடைப்பிடித்து ஒழுகுகின்ற மனிதன், எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அமைதியாகவும், அச்சமில்லாமலும் தன்னை அடக்கி யாண்டு கொண்டிருப்பான். மெய்ப்பொருளை விடுவதா, அல்லது தனது சரீர சௌகரியங்களை விடுவதா என்ற சோதனைக்காலம் வரும் போது, அவன் தனது சரீர சௌகரியங்களை விட்டுவிட்டு உறுதியா யிருக்கிறான். சித்திரவதை அல்லது மரணம் வருவதானாலும், அஃது அவனைத் தடுக்கவாவது, மாற்றவாவது முடியாது. 'யான்' என்னும் மனிதன் தனது செல்வத்தை இழத்தலையும், தனது சௌகரியங்களை இழத்தலையும், தனது உயிரை இழத்தலையும் மிகமிகப் பெரிய ஆபத்துக்களாகக் கருதுகிறான். ஒரு கொள்கையைக் க்டைப்பிடித்து ஒழுகும் மனிதன் இந்த சம்பவங்களை மிக அற்பமானவையாகவும், மெய்ப்பொருள் இழப்போடும் ஒழுக்க இழப்போடும் ஒப்பிடத் தக்கவையல்லவென்றும் கருதுகிறான். மெய்ப் பொருளைக் கைவிடுதலே அவனுக்கு ஓர் ஆபத்தென்று சொல்லத் தக்கது.

சங்கடகாலந்தான் யார் யார் இருளின் அடிமைகள்,

யார் யார் ஒளியின் மக்கள் என்று தீர்மானிப்பது. அச்சுறுத்தும் விபத்து, அழிவு, இம்சை இவை வருங்காலந்தான் செம்மறி ஆடுகளிலிருந்து வெள்ளாடுகளைப் பிரித்துக் காட்டுவது; வலிமையுள்ள ஆடவர்களையும் மகளிர்களையும் பிற்காலத்தவருடைய மதிப்புக்குப் பாத்திர ராக்குவது.

ஒரு மனிதன் தனது உடைமைகளை அநுபவிக்கும்படியாக விடப்பட்டிருக்கிற காலமெல்லாம் சாந்தி, சகோதரத்வம், பேரன்பு இவற்றின் கொள்கைகளைக் கைக்கொண்டும் நம்பியும் இருக்கும்படி தன்னைச் செய்துகொள்வது அவனுக்கு எளிதாயிருக்கும். ஆனல், அவனுடைய அவ்வனுபோகங்களுக்கு ஆபத்து வரும்போது, அல்லது அவ்வனுபோகங்களுக்கு ஆபத்து வருகிறதாக அவன் நினைக்கும்போது, அவன் சண்டைக்காக உறைத்துச் சத்தமிடுவானுபின், அவன் சாந்தி, சகோதரத்வம், பேரன்பு, இவற்றைக் கொண்டிருக்க வில்லையென்றும், சண்டை, சுயநயம், வெறுப்பு இவற்றைக் கொண்டிருக்கிறதாகவும் காட்டுகிருன்.

தனது உலக உடைமை ஒவ்வொன்றையும் இழக்கும்படியான நிலைமை ஏற்படும்போதும், தன் மதிப்பையும் உயிரையும் கூட இழக்கும்படியான நிலைமை ஏற்படும்போதும், தனது கொள்கைகளைக் கைவிடாதவனே மனிதன்; தனது ஒவ்வொரு சொல்லும் செயலும் நிலைநிற்கச் செய்யும் மனிதன், பிற்காலத்தார் கனப்படுத்தி மரியாதை செய்து வணங்கும் பெருமைவாய்ந்த மனிதன். தமக்கு ஆதாரமாகக் கொண்டிருந்ததும், தாம் பூரணமாக

நம்பியிருந்தது மான தெய்வ அன்பைக் கைவிட மறுத்து, ஏசுநாதர் மிகமிகக் கொடிய துன்பத்தையும் கஷ்டத்தையும் அனுபவித்தார்; இன்று இவ்வுலகம் அவருடைய பாதார விந்தங்களில் ஆனந்த பரவசத்துடன் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரிக்கின்றது.

ஆன்ம உண்மைகளைக் காணும் அக ஒளியையும் அறிவையும் தவிர, ஆன்ம வலிமையை அடைவதற்கு வேறு வழி இல்லை; அடிக்கடி நினைப்பதாலும் அப்பியசிப்ப தாலுமே அவ்வான்ம உண்மைகளைக் காணமுடியும்.

தெய்வ அன்பை எடுத்துக்கொள்ளுங்கள்; அதனைப் பூரணமாக அறிந்துகொள்ளும் நோக்கத்துடன் அதைப் பற்றி அமைதியோடும் சுறுசுறுப்போடும் தியானியுங்கள். அதனுடைய மின்சார ஒளியை உங்கள் பழக்கங்கள், உங்கள் செயல்கள், மற்றவர்களோடு நீங்கள் கொள்ளும் உறவு, நீங்கள் பேசும் பேச்சு, உங்கள் ஒவ்வொரு நினைப்பு, விருப் பம், இவற்றில் காட்டுங்கள். இவ்வழியில் நீங்கள் முயலும் போது, தெய்வ அன்பு மேன்மேலும் நன்ருக உங்களுக்குத் தெரியும்; உங்கள் சொந்தக் குறைகள் மேன்மேலும் தெளி வாக உங்களுக்குத் தோன்றி, உங்களைப் புது முயற்சியில் ஈடுபடுத்தும்; அவ்வழியாத அன்பின் ஒப்பற்ற மகத்து வத்தை ஒரு க்ஷணம் தரிசனம் செய்துவிடின், பின்னர் ஒரு போதும் நீங்கள் உங்கள் பலஹீனத்தில், உங்கள் சுயநயத் தில், உங்கள் குறைபாட்டில் இருக்கமாட்டீர்கள்; அந்த அன்புக்குப் பொருத்த மற்ற ஒவ்வோர் அம்சத்தையும்

கைவிட்டு, அதற்கு முழுப் பொருத்தமாக உங்களைச் செய்து கொள்ளும் வரையில், நீங்கள் அதனைப் பின்பற்றிச் செல்வீர்கள். அன்பிற்கு ஒற்றுமையான அக நிலைமையே ஆன்ம வலிமை. தூய்மை, கருணை போன்ற ஆன்ம உண்மைகளை எடுத்து அவற்றைப்பற்றியே தியானித்து, அவற்றை மேன் மேலும் அப்பியசியுங்கள்; உங்கள் ஆன்மாவின் ஒவ்வொரு மாசும் நீங்கும் வரையிலும், உங்கள் ஹிருதயத்திலிருந்து கடினத்தன்மையும், குற்றங்காண்டலும், இரக்கமின்மையும் நீங்கும் வரையிலும் நீங்கள் இடைவழியில் நில்லாதவர்களாகி, மெய்ப்பொருள்பால் சேருவீர்கள்.

இந்த உண்மைகளை நீங்கள் எவ்வளவுக் கெவ்வளவு அறிந்து, உணர்ந்து, நம்புகின்றீர்களோ, அவ்வளவுக் கவ்வளவு ஆன்ம வலிமையை அடைவீர்கள்; அவ் வலிமை உங்களிடத்திலும், உங்கள் மூலமாகவும், மேன்மேலும் வளர்ந்து கொண்டிருக்காநின்ற அமைதி, பொறுமை, சமநிலை இவற்றின் வடிவங்களாக வெளிப்படும்.

அமைதி மேலான தன்னடக்கத்தைக் காட்டுகின்றது; உன்னதமான பொறுமை தெய்வ ஞானத்தின் அறிகுறியாகின்றது; வாழ்க்கையின் கடமைகளுக்கும் சிதறல்களுக்கும் மத்தியில் அசைக்கப்படாத ஓர் அமைதியைக் கொண்டிருத்தல் அவ்வமைதியுடையார் ஆன்ம வலிமையுள்ள மனிதர் எனக் காட்டுகின்றது. உலகத்தில் உலகத்தாரது அபிப்பிராயத்தைப் பின்பற்றி வாழ்தல் எளிது; தனித்த இடத்

தில் தனது சொந்த அபிப்பிராயத்தைப் பின்பற்றி வாழ்தல் எளிது; ஆனால், எவன் கூட்டத்தின் மத்தியில் ஏகாந்தத்தின் பூரண இனிமையை அனுபவிக்கிறானோ, அவனே பெரிய மனிதன்".

அமைதியின் நிறைவே அற்புதங்களைச் செய்யும் வலிமைக்கு மூலம் என்று சில யோகிகள் கூறுகின்றார்கள். உண்மையில், எவ்வளவு பெரிய இடியும் தன்னைப் பாதிக்க முடியாத விதத்தில் எவன் தனது மனோ சக்திகளை அடக்கி ஆள்கிறானோ, அவன் அச் சக்திகளைச் சாமர்த்தியமாகச் செலுத்தி நடாத்தும் திறமையை உடையவனா யிருப்பான்.

தன்னடக்கத்தில், சாந்தத்தில், சமாதானத்தில் வளர்தல், பலத்திலும், வலிமையிலும் வளர்தலேயாம்; ஒரு கொள்கையில் உங்கள் சித்தத்தை ஏகாக்கிரப் படுத்தலினாலே தான், நீங்கள் அக் கொள்கைப்படி வளர்ச்சி யடையக்கூடும். ஒரு குழந்தை எவ்வித உதவியும் இல்லாமல் நடப்பதற்குப் பலமுறை எத்தனங்கள் செய்து பல முறை தவறி விழுந்து, கடைசியாக நடத்தல் போல, நீங்கள் முதலில் தனிமையாக நடப்பதற்கு எத்தனித்து வலிமை மார்க்கத்தில் பிரவேசித்தல் வேண்டும். மனிதர்களுக்குள் நீங்கள் நிமிர்ந்து தனிமையாக நடந்து செல்லும் திறமையை அடையும் வரையில் வழக்கம், சம்பிரதாயம், ஐதிகம் என்னும் கொடுமையை உடைத்தெறிய வேண்டும். உங்கள் சொந்த அறிவை நம்புங்கள்; உங்கள் மனச்சாக்ஷிக்கு ஒத்து நடங்கள்; உங்கள் அக விளக்கைப் பின்பற்றிச் செல்லுங்கள்; புற விளக்குகளெல்

லாம் கொள்ளிவாய்ப் பிசாசுகள். நீங்கள் அறிவற்றவர்க ளென்றும், உங்கள் அறிவு பிழைபட்டதென்றும், உங்கள் மனச்சாக்ஷி முழுக் கோணலானதென்றும், உங்கள் அக விளக்கு இருளென்றும் சொல்பவர்கள் பலர்கள் இருப்பார் கள்; அவர்களுடைய சொற்களைக் கவனிக்காதிர்கள். அவர் கள் சொல்வது உண்மையாயிருப்பின், நீங்கள் ஞானத்தை நாடுகிறவர்க ளானபடியால் நீங்கள் அவ்வுண்மையை விரை வில் தெரிந்து கொள்வது நன்மையே; உங்கள் சக்திகளை உபயோகித்து அவ் வுண்மையை நீங்கள் காணக்கூடும். ஆதலால், உங்கள் மார்க்கத்தில் நீங்கள் தைரியமாகச் செல் லுங்கள். உங்கள் மனச் சாக்ஷி உங்களுக்குச் சொந்தமானது; அதனைப் பின்பற்றிச் செல்பவன் ஆண்மகன்; மற்றொருவ னுடைய மனச் சாக்ஷியைப் பின்பற்றிச் செல்பவன் அடிமை. நீங்கள் அநேக தடவை தவறி விழலாம்; அநேக காயங்களை அடையலாம்; அநேக குத்துகளைச் சிறிது காலம் பெறலாம்; ஆனால், உங்கள் வெற்றி வெகு சமீபத்தில் இருப்பது உண்மையென்றும் உறுதி யென்றும் நம்பி, விசுவாசத்தோடு முன் செல்லுங்கள். ஒரு பாறையை, ஒரு கொள்கையைத் தேடுங்கள்; அதனைக் கண்டதும் அதனை நன்றாகப் பற்றிக் கொள்ளுங்கள்; அதனை உங்களுக்கு ஆதாரமாகக் கொள் ளுங்கள்; அசையாமல் நீங்கள் அதனோடு சேர்ந்து, சுயநயத்தின் அலைகளையும் புயல்களையும் வெல்லும் வரை யில், நீங்கள் அதன்மேல் அசையாமல் நில்லுங்கள்.

சுயநயம், எந்த உருவோடு கூடியதாயினும், சிதறுத லும், பலஹீனமும், மரணமும் ஆகும்; பரநயம், அதன்

## சாந்திக்கு மார்க்கம்.

ஆன்மக் காட்சியில், ஒன்று படுதலும், பலமும், உயிரும் ஆகும். ஆன்ம வாழ்க்கையில் நீங்கள் வளர்ந்து, உண்மைக் கொள்கைகளை உறுதியாகப் பற்றிக்கொண்ட காலையில், நீங்கள் அக் கொள்கைகளைப் போலவே அழகும் அசையாத் தன்மையும் உடையவர்கள் ஆவீர்கள்; அவைகளின் அழியாத சாரத்தின் இனிமையை அனுபவிப்பீர்கள்: அகக் கடவுளின் அழியாத நித்தியமான தன்மையை அடைவீர்கள்.

## ஆன்ம வலிமையை அடைதல்.

விதியின் நடுங்கும் அடிமைக ளாலே
சூழப் பட்டும் ,காமா துள்ளம்
சாபமொடு துன்பையும் நோவையும் எதிர்த்து
வெறுப்பெனும் புயலிடை மேலே நிமிர்ந்து
நிற்கும் ஒழுக்க நிலையனைத்
துன்பம் நல்கும் அம்புகள் அணுகா.

மௌன வலிமையால் மகிமையொடு சாந்தி
அமைந்து நிற்கிறான்; அசையான்; திரும்பான்.
துயரந பவிக்கும் இருள்நே ரத்தில்
பொறுமையோ டுறுதியாய் நிற்கிறான்; காலம்
அவனுக் கடிபணி கின்றது;
சாவையும் விதியையும் தள்கிறான் உதைத்தே.

அவனைச் சுற்றி வெகுளியின் பயங்கர
மின்னல்கள் ஒடி விளையாடு கின்றன;
அவனது தலைமேல் நரக இடிகள்
முழங்கு கின்றன; அவன் அசை கின்றிலன்;
அவனை அவைகொலல் ஆற்ற,
காலமோ டிடத்தைக் கடந்தவ னுதலால்.

அழியா அன்பால் ஆளப் படுகிற
அவனுக் கச்சம் யாதில் உளது?
மாறா மெய்ப்பொருள் மேவிய அவன்தான்
இலாபநட் டங்கள் எங்ஙனம் காண்பான்?
நித்தியத் துவத்தைப் பெற்றதால்
அசைகின் றிலன்காண் நிழல்வந் தேகுங்கால்.

## சாந்திக்கு மார்க்கம்.

"அவன் இறவாதவன்; அவன் ஒளி; மெய்ப்பொருள்;
எதிர்காலம் உணர்த்தும் இறை" எனச் சொல்மின்.
அவன் அவ்வுயர்நிலை அடைந்தனன் விருப்பொடு
கடவுள் மகிமையின் உடையை உடுத்தே
இரவின் கொடிய இருளில்
கடவுட் டன்மையை இடைவிடா துன்னியே.

## சுயநயமற்ற அன்பை அநுபவித்தல்.

கரடு முரடான ஒவ்வொரு கல் துண்டிலும் ஓர் அழகிய பொருளேயும், அதனைக் காக்ஷிக்குக் கொண்டு வருவதற்குக் கைதேர்ந்த ஒரு கல்தச்சன் வரவையும் மிக்கேல் ஆங்கிளோ என்பவர் கண்டார். அவ்வாறே, ஒவ்வொரு மனிதனுள்ளும் தெய்வ சொரூபம் இருக்கிறது; தன்னைக் காக்ஷிக்குக் கொண்டு வருவதற்கு நம்பிக்கையாகிய கைதேர்ந்த கல்தச்சனையும் பொறுமையாகிய கல்லுளியையும், அஃது எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. அத்தெய்வ சொரூபம் குற்றமற்றதும் சுயநயமற்றதுமான அன்பாக வெளிப்பட்டு அநுபவிக்சப் படுகிறது.

ஒவ்வொரு மனித ஹிருதயத்திலும் தெய்வ-அன்பின் சக்தி ஆழ்ந்து மறைந்திருக்கிறது; அஃது ஊடுருவிப் புக முடியாத திண்மையான பல திரைகளால் மூடப்பட்டிருக்கிறது; அதனுடைய பரிசுத்தமான, குற்றமற்ற சாராம்சம்

அழியாமையும் நித்தியத்துவமும் ஆகும். அது மனித விடத்துள்ள மெய்ப்பொருள். அது கடவுளுடைய அம்சம்; அஃது உண்மையானது; அழிவில்லாதது. மற்றைய பொருள்களெல்லாம் மாறுதல் அடைகின்றன, அழிந்து போகின்றன; இதுமாத்திரம் மாறுதல் அடையாமலும் அழியாமலும் இருக்கின்றது; மிக மிக உயர்ந்த ஒழுக்கத்தை இடைவிடாது சுறுசுறுப்போடு அப்பியசித்து, இந்தஅன்பை அனுபவித்தலும், அதில் வாழ்தலும், அதனைப் பூரணமாக அறிதலும் அழியாத் தன்மையுள் பிரவேசித்தலுக்கும், மெய்ப்பொருளோடு ஒன்றுவதற்கும், கடவுளோடு ஐக்கியமாவதற்கும், எல்லாப் பொருள்களின் மத்திய ஹிருதயத்தோடு ஏகமாதற்கும், நம்முடைய சொந்தக் கடவுட் டன்மையையும் அழியாத் தன்மையையும் அறிவதற்கும் நெறிகளாம்.

இந்த அன்பை அடைதற்கும், அதனை அறிந்து அனுபவித்தற்கும் ஒருவன் பெரிய பிடிவாதத்தோடும் சுறுசுறுப்போடும் தனது ஹிருதயத்திலும் மனத்திலும் வேலை செய்ய வேண்டும்; எப்பொழுதும் தனது பொறுமையைப் புதிதாக்கிக்கொண்டும், தனது நம்பிக்கையைப் பலப்படுத்திக் கொண்டும் இருக்கவேண்டும். ஏனெனில், தேய்வ சொரூபம் தனது பூரண திவ்விய அழகுடன் வெளிப்படுவதற்கு முன்னர் நாம் விடவேண்டியவை பல உண்டு.

கடவுளைச் சேர்தற்கும் அடைதற்கும் முயற்சிக்கிற மனிதன் பூரணமாகப் பரீக்ஷிக்கப்படுவான்; இப் பரீக்ஷை இன்றியமையாதது. ஏனெனில், மெய்ஞ்ஞானத்திற்கும்

## சுயநயமற்ற அன்பை அநுபவித்தல்.

கடவுட்டன்மைக்கும் ஆதாரமான உயர்ந்த பொறுமையை ஒருவன் வேறு எவ்விதமாகவும் அடைய முடியாது. அவன் அபிவிர்த்தி அடையும் காலத்தில் அவனுடைய வேலைக ளெல்லாம் பயனற்றவையாகத் தோன்றும்; அவனுடைய முயற்சிகளெல்லாம் பிரயோஜனமற்றவையாகத் தோன்றும். அவசரமாக வேலைசெய்தல் அவனுடைய சொரூபத்தைக் கெடுத்துவிடும். ஒரு கால், அவன் தனது வேலை அநேக மாக முடிந்துவிட்டதென்று நினைக்கும்போது, அவன் தெய்வ-அன்பின் அழகிய உருவமென்று நினைத்துக்கொண் டிருந்த பொருளானது முழுவதும் அழிக்கப்பட்டிருக்கவும், அவன் தனது வேலையைத் தனது முந்திய கஷ்டத்தோடு திரும்பி ஆரம்பிக்க வேண்டுமென்றும் காண்பான். ஆனல், எவன் மேலான பரம்பொருளை அபரோக்ஷமாக அறிவதற்கு உறுதியாக முயற்சிக்கிறனே, அவன் தோல்வி என்னும் ஒன்று உண்டென்று அங்கீகரிக்க மாட்டான். தோல்விக ளெல்லாம் வெறுந் தோற்றமே தவிர, உண்மை அல்ல. ஒவ்வொரு தவறுதலும், ஒவ்வொரு வீழ்ச்சியும், ஒவ்வொரு சுயநயச் செயலும் படித்துமுடிந்த ஒரு பாடமாம்; அநு பவித்து முடிந்த ஓர் அநுபவமாம். அதிலிருந்து ஞான மாகிய தங்கத் தானியம் ஒன்று உண்டாகும்; அஃது அவ னுடைய உயர்ந்த இலக்ஷியத்தை அடைவதற்கு உதவி செய்யும்.

ஒவ்வொரு பாவச் செயலையும் நம் காலால் மிதித்து ஒழித்து மேல் ஏறும் ஓர் ஏணியை நாம் செய்துகொள்ளலா மென்று தெரிதல், நம்மைக் கடவுளிடத்துக் கொண்டுபோய்ச்

சேர்க்கும் வழியில் புகுதலாம். இவ் வுண்மையைத் தெரிந்துள்ள ஒருவனுடைய தவறுதல்கள் செத்துப்போன சுயநயக் குப்பைகளாம்; அவற்றினின்று அவன், படிக் கற்கள் மேல் ஏறுதல் போல, மேலான நிலைகளுக்கு ஏறுகிறான்.

உங்கள் தவறுதல்களை நீங்கள் மேல் செல்வதற்குரிய படிகளென்று அறிவீர்களானால், உங்கள் துக்கங்களும் துன்பங்களும் நீங்கள் எவ்வெங்கே பலஹீனராய் இருக்கிறீர்கள் என்றும், தவறுகிறீர்கள் என்றும், நீங்கள் எங்கெங்கே மெய்ம்மைக்கும் தெய்வத்தன்மைக்கும் கீழே தாழ்கிறீர்கள் என்றும் உங்களுக்கு வெளிப்படையாகச் சொல்லுகின்ற ஆசிரியர்களாகும்; பின்னர், நீங்கள் இடைவிடாது உங்களையும், உங்கள் ஒவ்வோர் இழுக்கையும் கவனித்துக் காக்கத் தொடங்குவீர்கள்; ஒவ்வொரு துன்பத்தின் வேதனையும் பூரண அன்புக்குச் சமீபமாக உங்கள் உள்ளத்தைக் கொண்டு போவதற்கு, உங்கள் உள்ளத்திலிருந்து எவற்றை நீக்க வேண்டுமென்றும், நீங்கள் எவ்விடத்தில் வேலைசெய்யத் தொடங்கவேண்டுமென்றும் உங்களுக்குக் காட்டும். உங்கள் அகத்தின் சுயநயத்திலிருந்து மேன்மேலும் பிரிந்து, நீங்கள் ஒவ்வொரு நாளும் முற்செல்லும் காலையில் சுயநயமற்ற அன்பு நாளடைவில் வெளிப்பட்டு உங்களுக்குத் தோன்றும். நீங்கள் பொறுமையிலும் அமைதியிலும் வளரும்போதும், உங்களுடைய கோபங்களும் வெடுவெடுப்புக்களும், படபடப்புக்களும் உங்களை விட்டு நீங்கும்போதும், மிக்க வலிமையுள்ள காமங்களும், துரபிமானங்களும் உங்களை அடிமைப் படுத்தியாளுதலை விடும்போதும் உங்களுள் தேய்வத்தன்மை

விழிக்கிறதென்றும், நித்திய ஹிருதயத்துக்குச் சமீபிக்கிறீர்கள் என்றும், சுயநயமற்ற அன்புக்கு நீங்கள் தூரத்தில் இல்லை என்றும் காண்பீர்கள். சுயநயமற்ற அன்பைக் கொண்டிருத்தல் சாந்தியும் மரணமின்மையுமாம்.

தெய்வ-அன்புக்கும் மனித-அன்புக்கும் வேற்றுமை மிக முக்கியமான ஒரு விஷயத்தில்தான் உண்டு. அஃதாவது, தெய்வ-அன்பிற்குப் பக்ஷபாதம் கிடையாது. மனித-அன்பு மற்றைய பொருள்களை யெல்லாம் விட்டுக் குறித்த ஒரு பொருளைப் பற்றிக்கொண்டிருக்கும்; அந்தப் பொருள் தன்னிடத்தினின்று நீக்கப்பட்ட பொழுது, அந்தப் பொருளிடத்து அன்பு செலுத்தியவனுக்கு உண்டாகும் துன்பம் பெரிதாயும் ஆழ்ந்ததாயும் இருக்கும். தெய்வ-அன்பு பிரபஞ்சம் முழுவதையும் தழுவுகின்றது; அது பிரபஞ்சத்தின் எந்தப் பாகத்தையும் பற்றிக் கொண்டிருக்கிறதில்லை; அப்படி இருந்தாலும், அது பிரபஞ்ச முழுவதையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறது. தனது மனித-அன்பிலுள்ள சகல சுயநய அசுத்த அம்சங்களையும் வெளிப்படுத்தி எரிக்கும் வரையில், அதனை நாளடைவில் சுத்தப்படுத்திக்கொண்டும், விசாலப்படுத்திக் கொண்டும் வந்து எவன் தெய்வ-அன்பை அடைகிறானோ, அவன் துன்பம் அடைவதே யில்லை. மனித-அன்பு சுருங்கியதாயும், அளவுபட்டதாயும், சுயநயத்தோடு சம்பந்தப்பட்டதாயும் இருக்கிறபடியால், அது துன்பத்தைத் தருகின்றது. தனக்கென ஒன்றை விரும்பாததாயும், முற்றிலும் தூயதாயும் இருக்கிற அன்பிலிருந்து துன்பமே வரமுடியாது. அப்படியிருந்தா

லும், தெய்வ-அன்பை அடைவதற்கு மனித-அன்புகளாகிய படிகள் இன்றியமையாதவை. எந்த உயிரும் மிக மிக ஆழ்ந்ததும், மிக மிகக் கூரியதுமான மனித-அன்பைக் கைக்கொள்ளாமல் தெய்வ-அன்பை அடைய முடியாது. மனித-அன்புகள் மூலமாகவும், துன்பங்கள் மூலமாகவும் சென்றால் மாத்திரம் தெய்வ-அன்பை அடையவும் அனுபவிக்கவும் முடியும்.

மனித-அன்புகளெல்லாம் அவை பற்றி நிற்கின்ற உருவங்களைப்போலவே அழியும் தன்மையன; ஆனால், உருவங்களைப் பற்றாததாயும், அழியாததாயும் இருக்கிற அன்பு ஒன்று இருக்கின்றது.

சகல மனித-அன்புகளும் மனித வெறுப்புக்களால் சம நிறையாக்கப்பட்டிருக்கின்றன; தனக்கு எதிரான பொருளையோ, செயலையோ, கொள்ளாத அன்பு ஒன்று இருக்கிறது; அது தெய்வத்தன்மை வாய்ந்ததாயும், சுயநய மாசற்றதாயும் இருக்கிறது; அது தனது நல் வாசனையைச் சகல உயிர்களிடத்தும் ஒரே தன்மையாக வீசுகின்றது.

மனித-அன்புகள் தெய்வ-அன்பின் பிரதி பிம்பங்கள்; அவை துக்கத்தையாவது, மாறுதலையாவது அறியாத மெய்ப்பொருளான அன்புக்குச் சமீபத்தில் ஆத்மாவை இழுக்கின்றன.

தனது தோளின் மீது படுத்திருக்கிற உதவியற்ற சிறு குழந்தையைத் தீவிரமான அன்போடு பற்றிக்கொண்டிருக்

கிற தாயானவள், அந்தக் குழந்தை செத்துப் பூமியின் மீது கிடக்கிறதைப் பார்க்கிறபோது துக்கக் கண்ணீரில் ஆழ்தல் நல்லது; அவளுடைய கண்ணீர் பெருகுதலும் அவளுடைய உள்ளம் உடைதலும் நன்மை. ஏனெனில், அவள் தன் பொறிகளுக்குப் புலப்படும் பொருள்களுடையவும் இன்பங் களுடையவும் நிலையற்ற தன்மைகளை ஞாபகப்படுத்திக் கொள்ளக் கூடும்; அவள் நித்தியமாயுள்ள அழிவில்லாத மெய்ப்பொருளுக்குச் சமீபமாக இழுக்கப்படுதல் கூடும்.

சகோதரனும், சகோதரியும், தலைவனும், தலைவியும், தங்களுடைய அன்புக்குப் பாத்திரமான பொருள் தத்தம்மி னின்று பிடுங்கிக் கொள்ளப்பட்ட பொழுது, ஆழ்ந்த துன் பத்தை அனுபவித்தலும் பெருந் துயருள் ஆழ்தலும் நன்மை; அப்போதுதான் எல்லாவற்றிற்கும் மூலமாய்க் காட்சிக்குப் புலப்படாததா யிருக்கிற மெய்ப்பொருளிடத் துத் தங்களுடைய அன்பைச் செலுத்தக் கற்றுக்கொள் வார்கள்; அந்த மெய்ப்பொருளிடத்துத்தான் நிலையான திருப்தியைக் காண முடியும்.

வீண் பெருமையும், பேராசையும், சுய லாப விருப்ப மும் உள்ள மனிதர்கள் தோல்வியும் அவமானமும் வறுமை யும் அடைதல் நல்லது; ஏனெனில், துன்பங்களாகிய எரிக் கிற நெருப்புக்கள் மூலமாக அவர்கள் செல்லவேண்டும்; அப்படியானால்தான் அடங்காத ஆன்மாவானது வாழ்க்கை யின் சிக்கல்களைப்பற்றிச் சிந்திக்கும்படி செய்யக் கூடும்; அவ்வாறுதான் மெய்ப்பொருளை அடைவதற்குத் தக்கபடி

அகத்தை மென்மைப்படுத்தவும், சுத்தப்படுத்தவும், தயாராக்கவும் கூடும்.

துன்பத்தின் கொடுக்கு மனித-அன்பின் அகத்தில் புகும்பொழுது, வியாதலமும் தனிமையும் பிரிவும் நட்பையும் நம்பிக்கையையுமுடைய ஆன்மாவை மறைக்கும் பொழுது, தஞ்சுதற்கு நிழலைக் கொடுக்கும் மெய்ப்பொருளின் அன்பை நோக்கி மனம் திரும்புகின்றது. இந்த அன்பை அடையும் யாரும் சௌகரியக் குறைவை நோக்கித் திருப்பப்படுவதில்லை; துன்பத்தால் துளைக்கப்படுவதில்லை; கஷ்ட காலத்தில் கைவிடப்படுவதில்லை. தெய்வ-அன்பின் மகிமை துக்கத்தால் சிக்ஷிக்கப்படுகிற அகத்தில் மாத்திரம் விளங்கக் கூடும்; அஞ்ஞானத்துடையவும் 'யான்' என்னும் அகங்காரத்துடையவும் உயிரும் உருவும் அற்ற வளர்ச்சிகள் நீக்கப்பட்ட பொழுதில் மாத்திரம், துக்கத்தால் தண்டிக்கப்பட்ட அகத்தில் தெய்வ-அன்பு வெளிப்படும்; அவ்வகத்தினர் முத்திநிலையின் உருவத்தைக் கண்டு அநுபவிக்கக் கூடும்.

சுய திருப்தியையும் பிரதி பலனையும் விரும்பாததும், வேற்றுமைகள் பாராட்டாததும், மன வருத்தத்தைத் தராததுமான அன்பு ஒன்றே தெய்வத்தன்மை வாய்ந்தது என்று சொல்லப்படத் தக்கது.

"யான்" என்பதையும், தீமையின் சௌக்கிய மற்ற நிழல்களையும் பற்றிக்கொண்டிருக்கிற மனிதர்கள் தெய்வ-அன்பு கடவுளுக்குச் சொந்தமான ஒரு பொருளென்றும், தங்களுக்கு வெளியிலுள்ளதும், எப்பொழுதும் தங்களுக்கு

வெளியில் இருக்கவேண்டியதுமான ஒரு பொருளென்றும் நினைக்கிற பழக்கமுடையவர்களா யிருக்கிறார்கள். உண்மையில், கடவுளுடைய அன்பு எப்பொழுதும் 'யான்' என்பதற்கு எட்டாததா யிருக்கிறது; ஆனால், 'யான்' என்பது அகத்தையும் மனத்தையும் விட்டு நீங்கிய பொழுது, சுய நய மற்ற அன்பு, உயர்ந்த அன்பு, கடவுள் அல்லது நன்மை வடிவமான அன்பு அகத்தில் நிலையாயுள்ள உண்மைப் பொருள் ஆகின்றது.

இந்தப் பரிசுத்தமான அன்பை உள்ளூர அனுபவித்தலே, மிக அதிகமாகப் பேசப்படுவதும், மிகக் கொஞ்சமாக உணரப்படுவதுமான கிறிஸ்து நாதருடைய அன்பு. அஃது ஆன்மாவைப் பாவத்தினின்று காப்பது மாத்திரமன்றி, தீமை புரிய விரும்பும் மனோநிலைமைக்கு மேறபட்டதாக உயர்த்துகின்றது.

ஆனால், ஒருவன் இந்த மேலான அனுபவத்தை அடைவது எப்படி? இந்த வினவுக்கு மெய்ப்பொருள் எப்பொழுதும் அளித்ததும், எப்பொழுதும் அளிப்பதுமான விடை:- "உன் அகத்திலிருந்து உன்னை வெளியேற்று; உன் அகத்துள் நான் அமருகிறேன்". 'யான்' என்பது இறக்கும் வரையில் தெய்வ அன்பைக் காண முடியாது; ஏனெனில், 'யான்' என்றல் அன்பு என்று ஒன்று இல்லை யென மறுத்தலாம். காணப்படுகிற பொருளை இல்லை யென்று மறுத்தல் எப்படி? 'யான்' என்னும் மூடுகல் ஆன்மாவின் சமாதிக் குழியின் மேலிருந்து நீக்கப்படும் வரையில்,

சித்திரவதை செய்யப்பட்டும், செத்துப் புதைக்கப்பட்டும் இருந்த இறப்பற்ற கிறிஸ்து, அன்பின் பரிசுத்த ஆவி, அநியாயத்தின் கட்டுகளை அவிழ்த்தெறிந்து, மறுபடி உயிர்த்தெழுந்து, பூரண மகிமையோடு வெளிவரல் முடியாது.

நாசரத்துக் கிறிஸ்து நாதர் கொல்லப்பட்டார் என்றும், அவர் மறுபடியும் உயிர்த்தெழுந்தார் என்றும் நீங்கள் நம்புகிறீர்கள். நீங்கள் அவ்வாறு நம்புதல் பிழை என்று நான் சொல்லவில்லை; ஆனால், அன்பு வடிவான மெல்லிய ஆன்மா உங்களுடைய சுயநய விருப்பங்களாகிய கொடிய சிலுவை மரத்தில் தினந்தோறும் சேர்க்கப்பட்டு ஆணி அடிக்கப்படுகிறதென்று நீங்கள் நம்புவதற்கு மறுப்பீர்களாயின், நீங்கள் அந்த அவநம்பிக்கையைக் கொள்வது பிழையென்றும், நீங்கள் கிறிஸ்து நாதரின் அன்பை மிகத் தூரத்தில் கூட பார்த்ததில்லையென்றும் நான் சொல்லுகிறேன்.

கிறிஸ்து நாதருடைய அன்பின் இரட்சிப்புச் சுவையை அறிந்ததாக நீங்கள் சொல்லுகிறீர்கள். உங்கள் கோபத்தினின்றும், உங்கள் வெடுவெடுப்பினின்றும், உங்கள் வீண் பெருமையினின்றும், உங்கள் சொந்த வெறுப்புக்களினின்றும், நீங்கள் பிறரைப்பற்றி அபிப்பிராயம் கூறுதலினின்றும், பிறரைக் குறை கூறுதலினின்றும் இரட்சிக்கப்பட்டிருக்கிறீர்களா? இல்லையானால், நீங்கள் எதிலிருந்து இரட்சிக்கப் பட்டிருக்கிறீர்கள்? கிறிஸ்து நாதரின் பேரன்பை எதில் அனுபவித் திருக்கிறீர்கள்?

எவன் தெய்வ-அன்பை அனுபவித் திருக்கிறானோ, அவன் ஒரு புதிய மனிதனாய் விட்டான்; சுயநயத்தின் அம்

சங்களால் அசைக்கப்படுதலினின்றும் ஆளப்படுதலினின்றும் நீங்கிவிட்டான். அவன் தனது பொறுமைக்கும், தனது தூய்மைக்கும், தனது அகத்தின் ஆழ்ந்த அறத்நிற்கும், தனது மாருத இன்பத்திற்கும் பெயர் பெற்றவன் ஆகிருன்.

தெய்வ அல்லது சுயநயமற்ற அன்பு, ஒரு வெறு மனே பாவனை அல்லது மனே வெழுச்சி அன்று. அது தீமையிலுள்ள நம்பிக்கையையும் தீமையின் ஆள்கையையும் ஒழித்து, மேலான நன்மையைச் சந்தோஷமாக ஆன்மா அனுபவிக்கும்படி செய்யும் ஒரு ஞான நிலைமையாம். மெய்ஞ்ஞானிக்கு அறிவும் அன்பும் பிரிக்க முடியாத ஒன்றேயாம்.

இந்த தெய்வ அன்பைப் பூரணமாக அநுபவித்தலை நோக்கி உலக முழுவதும் சென்று கொண்டிருக்கிறது; இந்தக் காரியத்திற்காகவே பிரபஞ்சம் உண்டாயிற்று; ஒவ்வோர் இன்ப அநுபவமும், பொருள்களையும் கருத்துக்களையும் கொள்கைகளையும் பற்றும் ஆன்மாவின் ஒவ்வொரு வளர்ச்சியும், அத் தெய்வ-அன்பை அடைவதற்குரிய ஒரு முயற்சியாம். ஆனால், உலகம் இந்த அன்பை இப்பொழுது அநுபவிக்க வில்லை; ஏனெனில், அது தன்னுடைய குருட்டுத் தனத்தால் அப்பொருளை விட்டுவிட்டு, அதன் ஓடுகிற நிழலைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. ஆதலால், துன்பமும் துக்கமும் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கின்றன; உலகமானது தானே வருவித்துக்கொண்ட துன்பங்களால்

கற்பிக்கப்பட்டு, பூரண சாந்தியையும் அமைதியையும் அளிக்கும் ஞானத்தையும், சுய நயம் இழந்த அன்பையும் காணும் வரையில் அவை தொடர்ந்து கொண்டே யிருக்க வேண்டும். 'யான்' என்பதை விடுவதற்குச் சித்தமுடைய வராகவும், விருப்பமுடையவராகவும், 'யான்' என்பதை விடுவதில் அடங்கியிருக்கிற எல்லாவற்றையும் தெரிந்து கொள்வதற்குத் தயாராகவும் இருக்கிற எல்லாரும் இந்த அன்பை, இந்த ஞானத்தை, இந்த சாந்தியை, இந்த மனோ அமைதியை அடையலாம.

பிரபஞ்சத்தில் தனது இஷ்டப்படி நடக்கும் சக்தி ஒன் றும் இல்லை; மனிதரைக் கட்டுப்படுத்தியிருக்கிற விதியின் மிகமிக வலிய விலங்குகள் தத்தம்மாலேயே உண்டுபண்ணப் பட்டவை. மனிதர் துன்பத்தை உண்டுபண்ணுகிற பொருளோடு சேர்த்து விலங்கிடப் பட்டிருக்கின்றனர்; ஏனெனில், அவர் அவ்விலங்குகளை விரும்புகின்றனர்; ஏனெனில், அவர் 'யான்' என்னும சிறிய இருட் சிறை அழகாயும் இன்பகரமாயும் இருக்கிறதாக நினைக்கின்றனர்; அச்சிறையை விட்டுவிட்டால் உண்மையான உடைமைகளை யெல்லாம இழந்து விடுவதாக அஞ்சுகின்றனர்.

உன்னால்நீ துன்பம் உறுகின்ருய்; வேறொருவன்<br>
தன்னால் அஃதுன்னைச் சார்ந்ததில்லை.—மன்னு! நீ<br>
வாழ்வதுவும் சாவதுவும் மற்றொருவ னாலல்ல;<br>
தாழ்வுயர்விங் கீவோன்நீ தான்.

விலங்குகளை உண்டுபண்ணித தன்னைச் சுற்றிச் சிறு இருட் சிறையைக் கட்டியதும், அகத்துள் வசிக்காநின்றது

மாகிய சக்தியானது, தான் அவாவும் போதும் விரும்பும் போதும் அந்தச் சிறையை இடித்து எறிந்துவிடக்கூடும்; ஆன்மா தனது சிறையின் பயனின்மையைக்கண்டபொழுது, தனது நெடுங்காலத் துன்ப அநுபவத்தால் அகண்ட ஒளியையும் அன்பையும் பெறுவதற்குத் தகுதியுள்ளதான பொழுது, தனது சிறையை இடித்தெறிய விரும்புகின்றது.

உருவத்தை நிழல் பின்பற்றுவது போலவும், நெருப்பிலிருந்து புகை வருவது போலவும், காரணத்தைக் காரியம் பின்பற்றுகின்றது; மனிதருடைய நினைப்புக்களையும் செயல்களையும் துன்பமும் இன்பமும் பின்பற்றுகின்றன; நம்மைச் சுற்றியிருக்கிற உலகத்தில் மறைந்துள்ள, அல்லது வெளிப்பட்டுள்ள, காரணம் இல்லாமல் காரியம் இல்லை; அந்தக்காரண காரியம் முற்றிலும் நியாயமாக நிகழ்கின்றது. மனிதர் துன்பமகசூலை அறுக்கின்றனர்; ஏனெனில், அவர் சமீபமான அல்லது தூரமான சென்ற காலத்தில் தீமையாகிய வித்துக்களை விதைத்திருக்கின்றனர். அவர் இன்பமாகிய மகசூலை அறுக்கின்றனர்; ஏனெனில், அவர் சென்ற காலத்தில் நன்மையாகிய வித்துக்களை விதைத்திருக்கின்றனர். இதைப்பற்றி ஒரு மனிதன் சிந்திக்கட்டும்; இதனை அறிவதற்கு அவன் முயற்சிக்கட்டும்; பின்னர், அவன் நன்மையாகிய வித்துக்களை மாத்திரம் விதைக்கத் தொடங்குவான்; தனது உள்ளமாகிய தோட்டத்தில் அவன் முன் விதைத்திருந்த களைமுளைகளைப் பிடுங்கி எரித்துவிடுவான்.

உலகம் சுயநயமற்ற அன்பை அறிகிறதில்லை; ஏனெனில், அது தனது சொந்த இன்பங்களைத் தேடுவதில் ஈடு

பட்டும், தனது மடமையினால் அழிந்துபோகக் கூடிய இன்பங்களையும் பலன்களையும் நிலையான இன்பங்களாகவும் பலன்களாகவும் கருதி அழியும் பொருள்களைப் பற்றிக் கொண்டும் இருக்கிறது. கொழுப்பினால் உண்டாகும் காமத் தீ பிடித்து, துன்பத்தால் எரிந்து வருந்துவதால், உலகம் மெய்ப்பொருளின் தூய சாந்தியின் அழகைப் பார்க்கிறதில்லை. பிழையும் பிரமையுமாகிய பயனற்ற உமியை உண்டு கொண்டிருப்பதால், அஃது எல்லாவற்றையும் காணும்படியான அன்பு மாளிகைக்குள் புகாதவண்ணம் தடுக்கப்பட்டிருக்கிறது.

இந்த அன்பைக் கொள்ளாமலும், அதனை அறியாமலும், மனிதர் அகத்தின் தியாகமில்லாத எண்ணிறந்த சீர்திருத்தங்களை உண்டுபண்ணுகின்றனர்; தனது அகத்தில் தீமையைத் தான் வளர்த்து விருத்தி செய்துகொண்டே, ஒவ்வொரு மனிதனும் தனது சீர்திருத்தமானது உலகத்தை நிலையாகத் திருத்தப்போவதாக நினைக்கிறான். மனித அகத்தைச் சீர்திருத்தும் தன்மையுள்ள சீர்திருத்தம் எதுவோ, அதுவே சீர்திருத்தம் என்று சொல்லப்படத் தக்கது; ஏனெனில், எல்லாத் தீமைகளும் மனித அகத்திலிருந்தே உண்டாகின்றன. உலகம் தனது சுய நயத்தையும் கட்சிச் சண்டையையும் விட்டுத் தெய்வ-அன்பின் பாடத்தைக் கற்றுக்கொள்ளும் வரையில், அது சர்வ வியாபகமான பேரின்பத்தை அனுபவிக்கும் நல்ல காலத்தைக் காண முடியாது.

## சுயநயமற்ற அன்பை அநுபவித்தல்.

எளியவரை இகழ்தலை வலியவர் நிறுத்தட்டும்; வலிய வரை நிந்தித்தலை எளியவர் நிறுத்தட்டும்; பேராசைக்காரர் எப்படி ஈவது என்றும், காமிகள் எப்படி தூயர் ஆகலாம் என்றும் அறியட்டும்; கக்ஷிக்காரர் சண்டையிடுவதை நிறுத் தட்டும்; கருணையில்லாதவர் மன்னிக்கத் தொடங்கட்டும்; பொறுமைக்காரர் மற்றவரோடு சேர்ந்து சந்தோஷிக்க முயற்சிக்கட்டும்; பிறரை நிந்திப்போர் தமது நடத்தையைப் பின்பற்றி நாணம் அடையட்டும்; ஆடவர்களும் மகளிர்களும் இந்த வழியைப் பற்றட்டும்; நல்ல காலம் இதோ வந்து விட்டது. ஆதலால், என் தனது அகத்தைச் சுத்தப் படுத்துகிறேன், அவன் உகை உபகாரி.

உலகமானது சுயநயமற்ற அன்பை அநுபவிக்கும் நல்ல காலத்தை இப்பொழுது அடையவில்லை; இன்னும் அநேக நூற்றாண்டுகள் வரையிலும் அடையப் போவது மில்லை; நீங்கள் விரும்பினால், நீங்கள் உங்கள் சுயநயத்திற்கு மேற்பட்டால், அந்த நல்ல காலத்தை இப்பொழுதே அடை யலாம்; நீங்கள் பக்ஷபாதம், வெறுப்பு, நிந்தனை இவற்றைக் கடந்து எவரையும் மன்னிக்கும் இனிய அன்புக்குச் செல் வீர்களானால், அந்த நல்ல காலத்தை அடையலாம்.

எவ்விடத்தில் துவேஷம், வெறுப்பு, நிந்தனை இருக் கின்றனவோ, அவ்விடத்தில் சுயநயமற்ற அன்பு இராது. அது சகல நிந்தனைகளையும் விட்டுவிட்ட அகத்தில் மாத்திரம் இருக்கிறது.

"நான் குடிகாரனையும், ஏமாற்றுகிறவனையும், நீசனை யும், கொலைகாரனையும் எவ்வாறு நேசிக்கக் கூடும்? நான்

அத்தகைய மனிதர்களை வெறுக்கவும் நிந்திக்கவுமே முடியும்'' என்று நீங்கள் சொல்லுகிறீர்கள். நீங்கள் அத்தகைய மனிதரை உற்சாகத்தோடு நேசிக்க முடியாதென்பது உண்மை; ஆனால், நீங்கள் அத்தகைய மனிதரைக் கட்டாயம் வெறுக்கவும் நிந்திக்கவும் வேண்டுமென்று சொல்லும்போது எல்லாவற்றையும் ஆள்கின்ற பெரிய அன்புடன் நீங்கள் பழகினதில்லை என்பதைக் காட்டுகின்றீர்கள்; ஏனெனில், அம் மனிதர் மிகுந்த துன்பங்களுள் பிரவேசித்து முடிவில் அகத் தூய்மையை அடைவது நிச்சயமென்று தெரிந்து கொள்வதற்காகவே அவர் அவருடைய தற்கால நிலையில் இருக்கின்றனரென்றும், தகுதியான காரணங்களினாலே தான் அவர் அந் நிலையில் இருக்கின்றனரென்றும் தெரிந்து கொள்ளும்படியான அக ஞானத்தை நீங்கள் அடைய முடியும். அந்த அக ஞானத்தை நீங்கள் அடைந்தபொழுது, அவரை வெறுக்கவாவது நிந்திக்கவாவது உங்களால் ஒரு சிறிதும் முடியாது; நீங்கள் அவரைப்பற்றி எப்பொழுதும் பூரண அமைதியோடும் ஆழ்ந்த இரக்கத்தோடும் நினைப்பீர்கள்.

ஜனங்கள் உங்களுக்கு எந்த வழியிலாவது இடையூறு செய்யும் வரையில், அல்லது நீங்கள் விரும்பாத ஒன்றைச் செய்யும் வரையில், நீங்கள் அவர்களை நேசித்துக்கொண்டும் உயர்வாகப் பேசிக்கொண்டும் இருந்து, அவர்கள் அவற்றைச் செய்த பின்னர் நீங்கள் அவர்களை வெறுத்துத் தாழ்வாகப் பேசுவீர்களாயின், நீங்கள் கடவுளுடைய சொரூபமாகிய அன்பால் ஆளப்படவில்லை. உங்கள் அகத்தில்,

## சுயநயமற்ற அன்பை அநுபவித்தல்.

நீங்கள் பிறரை இடைவிடாது குற்றம் சாற்றிக் கொண்டும், நிந்தித்துக் கொண்டும் இருப்பீர்களாயின், சுய நய மற்ற அன்பு உங்களினின்று மறைக்கப்பட்டிருக்கிறது.

அன்பு எல்லா உயிர்களுடைய அகத்திலும் இருக்கிற தென்று எவன் தெரிகின்றானோ, எல்லா உயிர்களையும் ஆளும் அன்பின் வலிமையை எவன் உணர்கின்றானோ, அவனுடைய அகத்தில் பிறரை நிந்தித்தலுக்கு இடம் இல்லை.

மனிதர் இந்த அன்பைத் தெரிந்து கொள்ளாமல் பிறரை விசாரித்துச் சிக்ஷிக்கும் நித்திய நீதிபதி ஒருவன் இருக்கிறான் என்பதை மறந்து, பிறரை விசாரித்துச் சிக்ஷிப் பதற்குத் தாமே நீதிபதிகள் ஆகின்றனர். மனிதர் தம்முடைய கொள்கைகளினின்றும், தம்முடைய சீர்திருத் தங்களினின்றும் வழிகளினின்றும் பிறர் விலகும்போது அவரை மதோன்மத்தர் என்றும், சமநிலையற்றவர் என்றும், அறிவு, உண்மை, யோக்கியதை இல்லாதவர் என்றும் கூறி வருத்துகின்றனர்; பிறர் தம்முடைய நிலைக்குச் சற்றேறக் குறைய ஒத்திருக்கும்போது அவரை நன்கு மதித்துப் பேசி மகிழ்விக்கின்றனர். அத்தகைய மனிதரே 'யான்' என்னும் அகங்காரத்தைக் கொண்டிருக்கின்றவர். ஆனால், எவனுடைய அகத்தில் மேலான அன்பு வேர் ஊன்றி யிருக்கிறதோ, அவன் பிறரை அவ்வாறு வருத்தி வகுக்கிற தில்லை; தன்னுடைய கொள்கைகளைப் பிறர் கொள்ளும்படி நாடுகிறதில்லை; தன்னுடைய வழிகளின் மேம்பாட்டைப்

பிறருக்கு எடுத்துக் கூறுவதில்லை. அன்புச் சட்டத்தைத் தெரிந்து, அதனைப் பிறர்பால் செலுத்தி, எல்லாரிடத்தி லும் ஒரேவித அமைதியான மனப் போக்கையும் அகப் பிரியத்தையும் கொண்டிருக்கிறான்.

தீய ஒழுக்கினரும் நல்ல ஒழுக்கினரும், மடையரும் அறிஞரும், கற்றாரும் கல்லாரும், சுயநயக்காரரும் பரநயக் காரரும் ஒரே தன்மையாக அவனுடைய அமைதியான நினைப்பின் வாழ்த்தைப் பெறுகின்றார்கள்.

நீங்கள் உங்களைச் சீர்திருத்துவதில் இடைவிடாது முயற்சிப்பதாலும், உங்கள் மீது வெற்றிமேல் வெற்றி அடைவதாலும் இந்த மேலான ஞானத்தை, இந்தத் தெய்வ அன்பை அடையக்கூடும். எவன் தூய்மையான அகத் தைக் கொண்டிருக்கிறானோ, அவன்தான் கடவுளைக் காண முடியும். உங்களுடைய அகமானது போதிய அளவு தூயதான காலையில், நீங்கள் புதிய பிறப்பை அடைவீர்கள்; ஒருபோதும் அழியாததும், மாறாததும், துன்பத்தையாவது துக்கத்தையாவது தராததுமான அன்பு உங்கள் உள்ளத் தில் ஒளிரும், நீங்கள் சாந்தியாய் இருப்பீர்கள்.

எவன் தெய்வ-அன்பை அடைவதற்கு முயற்சிக் கிறானோ, அவன் பிறரைக் குறைகூறும் தன்மையை ஒழிப்ப தற்கு நாடிக்கொண்டிருக்கிறான்; ஏனெனில், எவ்விடத்தில் தூய ஆன்மஞானம் இருக்கிறதோ, அவ்விடத்தில் பிறர் பால் குறைகாணும் தன்மை இருக்கமுடியாது; பிறர் மீது

குற்றம் காண முடியாத அகத்தில் மாத்திரமே அன்பு பூரணமாகி முற்றிலும் உணரப்படுகிறது.

கிரிஸ்தவர் நாஸ்திகரை நிந்திக்கின்றனர்; நாஸ்திகர் கிறிஸ்தவரைப் பரிகசிக்கின்றனர்; துவைதிகளும் அத்துவைதிகளும் இடைவிடாது வாய்ச்சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள்; சாந்தியும் அன்பும் தங்கியிருக்கவேண்டிய அவர்களுடைய உள்ளங்களில் பகைமையும் வெறுப்பும் தங்கியிருக்கின்றன.

"தனது சகோதரனை வெறுக்கிறவன் ஒரு கொலைஞன்"; தெய்வ-அன்பாகிய ஆத்மாவைச் சிலுவையில் இடுகின்றவன். நீங்கள் சகல மதத்தினர்களையும் மதமற்றவர்களையும் ஒரே பக்ஷபாதமற்ற தன்மையில் மதிக்கும் வரையில், ஒரு சிறிதும் துவேஷம் இல்லாமலும், முற்றிலும் சமத்துவமாகவும் நேசிக்கும் வரையில், தன்னைக் கொண்டிருக்கிறவனுக்கு விடுதலையையும் மோக்ஷத்தையும் கொடுக்கும் அன்பை அடைவதற்கு நீங்கள் முயற்சிக்க வேண்டியவர்களாயிருக்கிறீர்கள். தெய்வ ஞானத்தையும், சுயநயமற்ற அன்பையும் அடைந்திருத்தல் பிறர்பால் குற்றம் காணும் தன்மையை அடியோடு ஒழிக்கின்றது; எல்லாத் தீமைகளையும் போக்குகின்றது; அஃது அன்பும், நன்மையும், நீதியுமாகவும், பிரபஞ்ச முழுவதும் வியாபித்ததாகவும், எல்லாவற்றிற்கும் மேம்பட்டதாகவும், எல்லாவற்றையும் வெல்வதாகவும், அழிக்கப்படாததாகவும் காணப்படும் தூய காட்சியின் உன்னத ஸ்தானத்திற்கு உயர்த்துகின்றது.

## சாந்திக்கு மார்க்கம்.

உங்களுடைய மனத்தை உறுதியான, பக்ஷபாதமற்ற, சாந்தமான நினைப்புக்களிற் பழக்குங்கள்; உங்களுடைய அகத்தைத் தூய்மையிலும் கருணையிலும் பழக்குங்கள்; உங்களுடைய நாவை மௌனத்திலும், உண்மையான குற்ற மற்ற பேச்சிலும் பழக்குங்கள்; நீங்கள் பக்தியும் சாந்தியு மாகிய வழியில் பிரவேசித்துக் கடைசியில் அழியாத அன்பை உணர்வீர்கள். அவ்வாறு வாழுங்கால், பிறரை உங்கள் மதத்தில் சேர்க்க நாடாமல், பிறருக்கு உங்கள் மத உண்மையை விளக்குவீர்கள்; தர்க்கம் செய்யாமல், நீங்கள் போதிப்பீர்கள்; ஆசையை வளர்க்காமல், நீங்கள் ஞானிகள் ஆவீர்கள்; மனிதருடைய அபிப்பிராயங்களைப் பெற முயலாமல், நீங்கள் அவர்களுடைய அகங்களை ஆள்வீர்கள். ஏனெனில், அன்பு சர்வ வல்லமை உள்ளது; எல்லாவற்றை யும் வெல்லத் தக்கது; அன்பின் நினைப்புக்களும், செயல் களும், சொற்களும் ஒருகாலத்திலும் அழியமாட்டா.

அன்பு சர்வ வியாபகமும், சர்வ மேம்பாடும், சர்வ ஆள்கையும் உள்ளதென்று தெரிந்துகொள்ளுதல், தீமையின் வலைகளிலிருந்து விடுபடுதலாம்; அகக் கலக்கத்தினின்று விடுபடுதலாம். எல்லா மனிதர்களும் தத்தம் சொந்த வழியில் மெய்ப்பொருளைக் காண்பதற்கு முயற்சித்துக் கொண்டிருக்கின்றனர் என்று தெரிந்துகொள்ளுதல், திருப் தியையும், துக்கமின்மையையும், அமைதியையும் அடைத லாம். இதுதான் சாந்தி; இதுதான் சந்தோஷம்; இதுதான் மரணமின்மை; இதுதான் தெய்வத் தன்மை; இதுதான் சுயநயமற்ற அன்பை அனுபவித்தல்.

## சுயநயமற்ற அன்பை அநுபவித்தல்.

கடற்கரை நின்றேன்; திடக்கடல் தாக்கலை
மலைகள் எதிர்க்கும் மாட்சியைக் கண்டேன்;
எண்ணில் தாக்கற் கிடையில் எப்படி
மலைநிற் கிறதென மனத்தென் ணுங்கால்,
“மலையைக் கரைப்பதற் கலையின் இடைவிடா
முயற்சிகள் பயனில” எனமொழிந் தேன்காண்.

ஆனால் மலைகளை அலைகள் எப்படி
உடைத்ததென் றெண்ணினேன்; உடனென் தாட்கீழ்
மலையுதிர் கல்மணல் அலையுடன் ஓடலைக்
கண்டேன்; பின்னர்க் கடலலை யின்கீழ்
பழைய புவிநில அடையாளம் கண்டேன்;
அலைக்குக் கற்கள் அடிமையென் றறிந்தேன்.

பொறுமை மென்மைசார் இடைவிடா ஓட்டத்தால்
நீர்செய் மாபெரும் வேலையைக் கண்டேன்;
அவைஎவ் வாறு பெரியகல் மலைகளைத்
தாட்கீழ்ப் படுத்தித் தரையாக் கினவோ?
மெல்லிய துளிகள் கல்லின் மலைகளை
எப்படி வென்றதோ? எவ்வா றழித்ததோ?

மனித உயிர்களின் எதிர்க்கும் இயல்புள
துனிமிகு பாவமாம் கனிபெரு மலைகள்
சென்றுவந் தருண்டகன் றென்றும் பாயும்
அன்பின் மெல்லிய அலைநீர்க் கிடங்கொடுத்
தெதிர்ப்பின் வலியெலாம் இழந்தும் விடுத்தும்
உளம்ஒவ் வொன்றுளும் செலுமா றறிந்தேன்.

## கடவுளோடு ஐக்கிய மாதல்.

ஆதி காலம் முதற்கொண்டு மனிதன், தனது சரீரப் பசிகளுக்கும் விருப்பங்களுக்கும் இடையில், தான் லௌகிக நிலையற்ற பொருள்களைப் பற்றிக்கொண்டிருக்கிற காலத்தில், தனது சரீர வாழ்க்கையின் அளவுபட்ட, நிலையில்லாத, தோற்ற மாத்திரையான தன்மையை எப்பொழுதும் உள்ளூர உணர்ந்துகொண்டும், தனது ஞான மோன நேரங்களில் கடவுளை அடைவதற்கு முயன்று கொண்டும், அக்கடவுளை அடைந்து அமைதியுறுதற்காகக் கண்ணீரோடு கோரிக்கொண்டும் இருக்கிறான்.

உலக இன்பங்கள் உண்மையானவை யென்றும் திருப்திதரத்தக்கவை யென்றும் வீணாக நினைத்துக் கொண்டிருக்குங் காலையில், துன்பமும் துக்கமும் தமது பொய்ம்மையையும் திருப்தியற்ற தன்மையையும் அவனுக்கு இடைவிடாமல் ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கின்றன. உலகப் பொருள்களில் பூரண திருப்தியைக் காணலா மென்று நம்புவதற்கு எப்பொழுதும் முயன்று கொண்டிருக்கையில், இந்த நம்பிக்கைக்கு விரோதமாகத் தன்னுடைய அகத்தின் பிடிவாதமான எதிர்ப்பை உணர்ந்து கொண்டிருக்கிறான்; அவ்வெதிர்ப்பு அவனுடைய ஆவசியகமான மரணத்

தன்மையை மறுப்பதாகவும், மரணமற்ற, நித்தியமாயுள்ள, அகண்டாகாரக் கடவுளிடத்தில் மாத்திரம் நிலையான திருப்தியையும், இடையருத சாந்தியையும் அவன் காணக் கூடுமென்பதை ருஜுப்படுத்துவதாகவும் இருக்கிறது.

இவ்விடத்தில்தான் விசுவாசத்தின் அடிநிலம் இருக்கின்றது; இவ்விடத்தில்தான் சகல மதங்களுடைய மூலமும் வேரும் இருக்கின்றன; இவ்விடத்தில்தான் சகோதரத்துவ ஆத்மாவும் அன்பின் ஹிருதயமும் இருக்கின்றன. மனிதன் தெய்வத் தன்மையும் நித்தியத்தன்மையும் வாய்ந்தவன்; அவன் மரண ஞாபகத்தில் அமிழ்ந்து அமைதியின்மையால் தொந்தரிக்கப்பட்டு, அவனுடைய உண்மையான தன்மையின் உணர்ச்சியை அடைவதற்கு எப்பொழுதும் முயன்று கொண்டிருக்கிருன்.

மனிதனுடைய ஆத்மா கடவுளிடத்தினின்று பிரிக்கப்படமுடியாதது; கடவுள் தவிர வேறு எதாலும் திருப்தியடைய மாட்டாதது; மனிதன் இந்த ஸ்தூல உலகைப் பற்றி அலைந்துகொண்டிருத்தலை நிறுத்தி, நித்தியப் பொருளின் உண்மைத் தன்மையிலுள்ள தனது வீட்டுக்குத் திரும்பி வரும் வரையில், துன்பத்தின் சுமை அவனுடைய ஹிருதயத்தை அமுக்கிக்கொண்டேயிருக்கும்; துக்கத்தின் நிழல்கள் அவனுடைய வழியை இருட்படுத்திக் கொண்டேயிருக்கும்.

சமுத்திரத்தினின்று பிரிக்கப்பட்ட ஒரு சிறு துளி ஜலம் சமுத்திர ஜலத்தின் தன்மைகளையெல்லாம் கொண்

டிருத்தல்போல, கடவுளாகிய அகண்டாகார அறிவினின்று பிரிக்கப்பட்ட மனிதன் கடவுளின் தன்மையை உடையவனு யிருக்கிறுன்; அத் துளி ஜலம், அதன் இயற்கைச் சட்டப்படி, கடைசியாகச் சமுத்திரத்திற்குச் சென்று அதன் மௌனமும் ஆழமுமான ஜலத்தோடு கலந்து தன் சொரூபத்தை இழந்து விடுதல் போல, மனிதன் அவனுடைய தவருத இயற்கைச் சட்டப்படி கடைசியில் அவனுடைய உற்பத்தி ஸ்தானத்திற்குச் சென்று, கடவுளாகிய பெரிய சமுத்திரத்தில் கலந்து தன் சொரூபத்தை இழந்து விடுகிறுன்.

கடவுளோடு மறுபடியும் ஐக்கியமாதல் மனிதனுடைய இலக்ஷியம். நித்திய சட்டமாகிய கடவுளோடு ஐக்கியமாதல் ஞானம், அன்பு, சாந்தி. இத் தெய்வத்தன்மையை சரீரத்தைப்பற்றிக்கொண்டிருக்கிற மனிதர்கள் உணரமுடியாது. சரீரப்பற்று, வேற்றுமைத்தன்மை, சுயநயம் இவையெல்லாம் உண்மையில் ஒன்றே; இவை மெய்ஞ்ஞானத்திற்கும் தெய்வத்தன்மைக்கும் விரோதமானவை; சரீரப்பற்றை முற்றும் விட்டுவிட்டால், வேற்றுமைத் தன்மையும் சுயநயமும் ஒழிந்து, மனிதன் தனது அழியாத் தன்மையும், அகண்டகாரமுமாகிய தெய்வத்தன்மை வாய்ந்த பிதிரார்ஜிதத்தை அடைகின்றுன்.

அவ்வாறு சரீரப்பற்றை விட்டுவிடுவதை உலகப் பற்றும் சுயநயமும் உடைய மனிதன் மிக மிகத் துன்பத்தைத் தரும் ஓர் ஆபத்தாகவும், மிக மிகப் பெரிய நஷ்ட

மாகவும் கருதுகிறான்; அவன் அவ்வாறு கருதினாலும், அதுதான் ஒப்புயர்வற்ற மேலான ஆசீர்வாதம்; நிலையான உண்மையான இலாபம். ஜீவ தத்துவத்தின் அகச் சட்டங்களையும், தன் உயிரின் தன்மையையும், விதியையும் அறியாத மனிதன், அநித்தியமான தோற்றங்களையும், நிலையான உண்மைத்தன்மை இல்லாத பொருள்களையும் பற்றிக்கொண்டிருக்கிறான்; அவ்வாறு பற்றிக்கொண்டு அவனுடைய சொந்தப் பிரமைகளோடு அழிகின்றான்.

மனிதர் மாமிசப் பிண்டமாகிய சரீரத்தைப் பற்றிக்கொண்டும், அஃது அழியாமல் என்றும் இருப்பதாக நினைத்துக் கொண்டும் அது விரும்பியவற்றையெல்லாம் அதற்குக் கொடுக்கின்றனர்; சரீரத்திற்கு அழிவு இன்றியமையாததென்பதையும், அவ்வழிவு விரைவில் வரக்கூடியதென்பதையும் அவர் மறந்துவிட முயற்சித்த போதிலும், மரண பயமும், அவர் பற்றிக்கொண்டிருக்கிற எல்லாவற்றின் இழப்புப் பயமும் அவருடைய மிக மிகச் சந்தோஷமான நேரங்களைப் பழுது படுத்துகின்றன; அவருடைய சுயநயத்தின் வெவ்விய நிழல் ஒரு குரூரமான பேய்போல அவரைப் பின் தொடர்கின்றது.

உலக சௌகரியங்களையும் உலக இன்பங்களையும் அதிகமாகக் கொள்ளும்போது, மனிதரின் அகத்துள் இருக்கின்ற தெய்வம் மருந்தூட்டப்பட்டு, ஸ்தூல உலகத்துள்ளும், அழிதற் றன்மையுள்ள ஐம்பொறி வாழ்க்கையுள்ளும் ஆழ்ந்து ஆழ்ந்து அமிழ்கின்றது; அப்போது சரீரத்

தின் அழியாமையைப் பற்றிய கற்பனைகள் தவருக உண்மைகளென்று மதிக்கப்படுகின்றன. ஒரு மனித னுடைய ஆத்மா எவ்விதமான சுயநயத்தாலாவது மூடப் பட்டிருக்கும்போது, அவன் தனது ஆத்ம பகுத்தறிவின் சக்தியை இழந்து, அநித்தியப் பொருள்களை நித்தியப் பொருள்களாகவும், அழிந்துபோகும் பொருள்களை அழி யாத பொருள்களாகவும், மரணமுடையவற்றை மரண மில் லாதனவாகவும், பொய்ப்பொருளை மெய்ப்பொருளாகவும் கருதுகிருன். இவ்வாறே உலகமானது மனித அநுப வத்தை ஆதாரமாகக்கொண்டிராத வெறுங்கற்பனைகளாலும் ஊகங்களாலும் நிறைக்கப்பட்டிருக்கின்றது. மாமிசத்தா லாய ஒவ்வொரு சரீரமும், அது பிறந்த நிமிஷம் முதற் கொண்டு, அதனை அழிக்கக்கூடிய அம்சங்களைக் கொண் டிருக்கின்றது; அதனுடைய மாற்ற முடியாத இயற்கைச் சட்டப்படி அஃது அழிந்தே தீரும்.

பிரபஞ்சத்திலுள்ள அழியும் பொருள்கள் ஒருபோதும் அழியாப் பொருள்களாக மாட்டா; அழியாப் பொருள்கள் ஒருபோதும் அழியமாட்டா; இறக்கும் உயிர்கள் ஒரு போதும் இறவா உயிர்களாக மாட்டா; இறவா உயிர்கள் ஒருபோதும் இறக்க மாட்டா; நிலையற்ற பொருள்கள் ஒரு போதும் நிலையுள்ள பொருள்களாக மாட்டா; நிலையுள்ள பொருள்கள் ஒருபோதும் நிலையற்ற பொருள்களாகமாட்டா; தோற்றங்கள் ஒருபோதும் உண்மைகளாகமாட்டா;உண்மை கள் ஒருபோதும் தோற்றங்களாகத் தேய மாட்டா; பொய்ப் பொருள் ஒருபோதும் மெய்ப்பொருள் ஆக மாட்டாது;

# கடவுளோடு ஐக்கியமாதல்.

மெய்ப்பொருள் ஒருபோதும் பொய்ப்பொருள் ஆகமாட்டாது. மனிதன் மாமிச உடம்பை அழியாத உடம்பாகச் செய்ய முடியாது; ஆனால், அதன் விருப்பங்களையெல்லாம் துறந்து, அதனை வென்று, அவன் அழியாத தன்மையுள் புகலாம்.

"கடவுள் ஒருவரே அழியாத் தன்மை வாய்ந்தவர்." பேரறிவாகிய கடவுட்டன்மையை அடைதலால் மாத்திரம் மனிதன் அழியாத் தன்மையுள் புகுகின்றான்.

கோடிக்கணக்கான உயிர்களது உடம்புகளின் இயற்கை மாறும் தன்மையது, அழியும் தன்மையது, நிலையற்றது; அவ்வியற்கையின் உண்மைத் தத்துவம் ஒன்றே நிலையுள்ளது. இயற்கை பல; அவற்றுள் ஒவ்வொன்றும் வேற்றுமை யுடையது. இயற்கையின் உண்மைத் தத்துவம் ஒன்றே; அஃது ஒற்றுமை யுடையது. புறப் பொறிகளையும் அகச் சுயநயத்தையும் வெல்வதனால், அஃதாவது இயற்கையை வெல்வதனால், மனிதன் தோற்ற மாத்திரையான சரீரத்திற்கு ஆதாரமான கருவிலிருந்து வெளிப்பட்டு, அழியக்கூடிய உருக்களெல்லாம் தோன்றுவதற்கு ஆதாரமான மெய்ப்பொருட் பிரதேசத்துள், ஆத்ம ஒளிக்குள், பறக்கிறான்.

ஆதலால், மனிதர்கள் தன்னை ('யான்' என்பதை) மறுத்தலை அப்பியசிக்கட்டும்; தங்களுடைய மிருக விருப்பங்களை வெல்லட்டும்; சுகத்திற்கும் இன்பத்திற்கும் தாங்கள் அடிமையாதலை மறுக்கட்டும்; அவர்கள் நல்லொழுக்கத்தை

அப்பியசித்துக் கடைசியாகக் கடவுட்டன்மையை அடையும் வரையில், மேலும் மேலும் உயர்ந்த ஒழுக்கத்தில் வளரட்டும்; பணிவு, சாந்தம், மன்னித்தல், இரக்கம், அன்பு இவற்றை அறிந்து அப்பியசிக்கட்டும்; இவ் வறிவும் அப்பியாசமுமே கடவுட்டன்மையை அடைதலாம்.

அருள் அகப் பார்வையை உண்டுபண்ணுகின்றது. எவன் தனது சரீரப்பற்றை வென்று, எல்லாப் பிராணிகளிடத்தும் அருளுடையவனா யிருக்கிறானோ, அவன் தெய்வத்தன்மை வாய்ந்த அகப் பார்வையை உடையவனாய்ப் பொய்யினின்று மெய்யைப் பிரித்து அறியும்படியான திறமையுடையவனாகிறான். ஆதலால், மிக மேம்பாடுற்ற நல்ல மனிதன் ஞானியும், தேவனும், அறிஞனும், கடவுளை உணர்ந்தவனும் ஆகிறான். எவனிடத்தில் தளராத அமைதியையும், அசையாத பொறுமையையும், மேலான தாழ்மையையும், இனிய பேச்சையும், தன்னடக்கத்தையும், தன்னை மறத்தலையும், ஆழ்ந்து நிறைந்த அநுதாபத்தையும் காண்கிறீர்களோ, அவனிடத்தில் மிக மிக உயர்ந்த ஞானத்தை எதிர்பாருங்கள்; அவனுடைய கூட்டுறவைக் கொள்ளுங்கள்; ஏனெனில், அவன் கடவுளை உணர்ந்துவிட்டான்; கடவுளுடன் வாழ்கின்றான்; கடவுளோடு ஐக்கியமாய் விட்டான். எவன் பொறுமையற்றவனா யிருக்கிறானோ, எவன் கோபிக்கிறானோ, எவன் தற்பெருமை பாராட்டுகிறானோ, எவன் இன்பத்தைப் பற்றிக்கொண்டிருக்கிறானோ, எவன் சுய நய போகங்களை விடுவதற்கு மறுக்கிறானோ, எவன் தயையையும் அகன்ற இரக்கத்தையும் அப்பியசிக்கவில்லையோ,

அவனை நீங்கள் நம்பாதீர்கள்; ஏனெனில், அவனிடத்தில் ஞானம் இல்லை; அவனுடைய அறிவெல்லாம் பயனற்றது; அவனுடைய செயல்களும் சொற்களும் அழிந்துபோம்; ஏனெனில், அவை அழிந்துபோகக் கூடியதையே ஆதாரமாகக் கொண்டுள்ளன.

மனிதன் ' யான் ' என்பதை விடக் கடவன்; உலகினை வெல்லக் கடவன்; சரீரப்பற்றை விடக்கடவன். இந்த வழியினால் மாத்திரமே கடவுளுடைய அகத்துட் பிரவேசிக்கக் கூடும்.

உலகமும், சரீரமும், தானும் காலமாகிய பாலை வனத்தில் தோற்றும் கானல் தோற்றங்கள்; ஆத்ம உறக்கத்தில் தோன்றும் அழிந்துபோகக்கூடிய சொர்ப்பனங்கள்; எவர்கள் அப்பாலை வனத்தைக் கடந்து விட்டார்களோ, எவர்கள் ஆத்ம விழிப்புடையவர்களா யிருக்கிறார்களோ, அவர்கள் மாத்திரம் எல்லாத் தோற்றங்களும் நீங்கிச் சொர்ப்பனமும் மயக்கமும் ஒழிந்து நிற்கும் சர்வ வியாபக மெய்ப்பொருளை உணர்ந்தவர்கள்.

ஒரு பெரிய சட்டம் இருக்கிறது; அது நிபந்தனையற்ற கீழ்ப்படிதலை வேண்டுகின்றது. ஓர் ஒற்றுமைத் தத்துவம் இருக்கிறது; அது சகல வேற்றுமைகளுக்கும் ஆதாரமானது. ஒரு நித்திய மெய்ப்பொருள் இருக்கிறது; அதில் உலகப் பிரச்சினைகளெல்லாம் தீர்ந்து விடுகின்றன. இந்தச் சட்டத்தை, இந்த ஒற்றுமையை, இந்த மெய்ப்பொருளை உணர்தல் அகண்டாகாரக் கடவுள் நிலையுட் பிரவேசித்து

நித்தியமான கடவுளோடு ஐக்கியமாதல். அன்பாகிய பெரிய சட்டத்தைப் பின்பற்றி ஒருவன் வாழ்க்கையை நடாத்துதல் அமைதியையும், சமாதானத்தையும், சாந்தியையும் அடைதற்கு வழி. தீமையிலும் பகைமையிலுமுள்ள சகல சம்பந்தங்களையும் விடுதலும், நன்மையையும் நட்பையும் விடாமையும், அகத்துள் நிலவும் தூய அமைதிக்கு முற்றிலும் கீழ்படிந்து நடத்தலும், பொருள்களின் ஹிருதயத்தின் உள்ளுள்ளே பிரவேசித்தற்கும், வெறுமனே அறியும் அறிவுக்கு எட்டாத நித்திய அகண்ட தத்துவப் பொருளை உணர்ந்து வாழ்தற்கும் நெறிகளாம். இத் தத்துவத்தை உணரும் வரையில், ஆத்மா சாந்தி அடைய மாட்டாது. எவன் இத் தத்துவத்தை உணருகின்றானோ, அவன் உண்மை ஞானி. அவனுடைய ஞானம் கற்றவர்களுடைய ஞானம் அன்று. ஆனால்,ஒரு குற்றமற்ற ஹிருதயத்திற்கும் தெய்விக மனிதத் தன்மைக்கும் சொந்தமான நேர்மையாம்.

அகண்டாகாரமாயும் நித்தியமாயும் உள்ள கடவுளை உணர்தல், இருள் இராஜியமாகிய காலத்திற்கும் உலகத்திற்கும் சரீரத்திற்கும் மேற்பட்டு நிற்றலாம்; ஒளி இராஜியமாகிய அழியாமை, பரலோகம், ஆத்மா இவற்றில் தங்குதலாம். கடவுளோடு ஐக்கியமாதல் வெறும் பேச்சு அல்லது மனோபாவம் அன்று; அஃது அகத்தைத் தூய்மையாக்குவதற்காகச் சிரத்தையோடு செய்த அப்பியாசத்தின் பலனாகிய பிரானுதார அனுபவம். சரீரம் மனிதன் அன்று என நம்பப்பட்டபொழுது; சகல பசிகளும் விருப்பங்களும் முற்றிலும் கீழ்ப்பட்டுத் தூய்மை யாக்கப்பட்ட பொழுது,

தன்மையை மறுப்பதாகவும், மரணமற்ற, நித்தியமாயுள்ள, அகண்டாகாரக் கடவுளிடத்தில் மாத்திரம் நிலையான திருப்தியையும், இடையறாத சாந்தியையும் அவன் காணக் கூடுமென்பதை ருஜுப்படுத்துவதாகவும் இருக்கிறது.

இவ்விடத்தில்தான் விசுவாசத்தின் அடிநிலம் இருக்கின்றது; இவ்விடத்தில்தான் சகல மதங்களுடைய மூலமும் வேரும் இருக்கின்றன; இவ்விடத்தில்தான் சகோதரத்துவ ஆத்மாவும் அன்பின் ஹிருதயமும் இருக்கின்றன. மனிதன் தெய்வத் தன்மையும் நித்தியத்தன்மையும் வாய்ந்தவன்; அவன் மரண ஞாபகத்தில் அமிழ்ந்து அமைதியின்மையால் தொந்தரிக்கப்பட்டு, அவனுடைய உண்மையான தன்மையின் உணர்ச்சியை அடைவதற்கு எப்பொழுதும் முயன்று கொண்டிருக்கிறான்.

மனிதனுடைய ஆத்மா கடவுளிடத்தினின்று பிரிக்கப்படமுடியாதது; கடவுள் தவிர வேறு எதைாலும் திருப்தியடைய மாட்டாதது; மனிதன் இந்த ஸ்தூல உலகைப் பற்றி அலைந்துகொண்டிருத்தலை நிறுத்தி, நித்தியப் பொருளின் உண்மைத் தன்மையிலுள்ள தனது வீட்டுக்குத் திரும்பி வரும் வரையில், துன்பத்தின் சுமை அவனுடைய ஹிருதயத்தை அமுக்கிக்கொண்டேயிருக்கும்; துக்கத்தின் நிழல்கள் அவனுடைய வழியை இருட்படுத்திக் கொண்டேயிருக்கும்.

சமுத்திரத்தினின்று பிரிக்கப்பட்ட ஒரு சிறு துளி ஜலம் சமுத்திர ஜலத்தின் தன்மைகளை யெல்லாம் கொண்

டிருத்தல்போல, கடவுளாகிய அகண்டாகார அறிவினின்று பிரிக்கப்பட்ட மனிதன் கடவுளின் தன்மையை உடைய வனு யிருக்கிறுன்; அத் துளி ஜலம், அதன் இயற்கைச் சட்டப்படி, கடைசியாகச் சமுத்திரத்திற்குச் சென்று அதன் மௌனமும் ஆழமுமான ஜலத்தோடு கலந்து தன் சொரூபத்தை இழந்து விடுதல் போல, மனிதன் அவ னுடைய தவருத இயற்கைச் சட்டப்படி கடைசியில் அவ னுடைய உற்பத்தி ஸ்தானத்திற்குச் சென்று, கடவுளாகிய பெரிய சமுத்திரத்தில் கலந்து தன் சொரூபத்தை இழந்து விடுகிறுன்.

கடவுளோடு மறுபடியும் ஐக்கியமாதல் மனிதனுடைய இலக்ஷியம். நித்திய சட்டமாகிய கடவுளோடு ஐக்கியமாதல் ஞானம், அன்பு, சாந்தி. இத் தெய்வத்தன்மையை சரீரத் தைப்பற்றிக்கொண்டிருக்கிற மனிதர்கள் உணரமுடியாது. சரீரப்பற்று, வேற்றுமைத்தன்மை, சுயநயம் இவை யெல்லாம் உண்மையில் ஒன்றே; இவை மெய்ஞ்ஞானத்திற் கும் தெய்வத்தன்மைக்கும் விரோதமானவை; சரீரப்பற்றை முற்றும் விட்டுவிட்டால், வேற்றுமைத் தன்மையும் சுய நயமும் ஒழிந்து, மனிதன் தனது அழியாத் தன்மையும், அகண்டகாரமுமாகிய தெய்வத்தன்மை வாய்ந்த பிதிரார்ஜி தத்தை அடைகின்றுன்.

அவ்வாறு சரீரப்பற்றை விட்டுவிடுவதை உலகப் பற்றும் சுயநயமும் உடைய மனிதன் மிக மிகத் துன்பத் தைத் தரும் ஓர் ஆபத்தாகவும், மிக மிகப் பெரிய நஷ்ட

மாகவும் கருதுகிறான்; அவன் அவ்வாறு கருதினாலும், அதுதான் ஒப்புயர்வற்ற மேலான ஆசிர்வாதம்; நிலையான உண்மையான இலாபம். ஜீவ தத்துவத்தின் அகச் சட்டங்களையும், தன் உயிரின் தன்மையையும், விதியையும் அறியாத மனிதன், அநித்தியமான தோற்றங்களையும், நிலையான உண்மைத்தன்மை இல்லாத பொருள்களையும் பற்றிக் கொண்டிருக்கிறான்; அவ்வாறு பற்றிக்கொண்டு அவனுடைய சொந்தப் பிரமைகளோடு அழிகின்றான்.

மனிதர் மாமிசப் பிண்டமாகிய சரீரத்தைப் பற்றிக் கொண்டும், அஃது அழியாமல் என்றும் இருப்பதாக நினைத்துக் கொண்டும் அது விரும்பியவற்றையெல்லாம் அதற்குக் கொடுக்கின்றனர்; சரீரத்திற்கு அழிவு இன்றியமையாத தென்பதையும், அவ்வழிவு விரைவில் வரக்கூடிய தென்பதையும் அவர் மறந்துவிட முயற்சித்த போதிலும், மரண பயமும், அவர் பற்றிக்கொண்டிருக்கிற எல்லாவற்றின் இழப்புப் பயமும் அவருடைய மிக மிகச் சந்தோஷமான நேரங்களைப் பழுது படுத்துகின்றன; அவருடைய சுயநயத்தின் வெவ்விய நிழல் ஒரு குரூரமான பேய்போல அவரைப் பின் தொடர்கின்றது.

உலக சௌகரியங்களையும் உலக இன்பங்களையும் அதிகமாகக் கொள்ளும்போது, மனிதரின் அகத்துள் இருக்கின்ற தெய்வம் மருந்தூட்டப்பட்டு, ஸ்தூல உலகத்துள்ளும், அழிதற் றன்மையுள்ள ஐம்பொறி வாழ்க்கையுள்ளும் ஆழ்ந்து ஆழ்ந்து அமிழ்கின்றது; அப்போது சரீரத்

தின் அழியாமையைப் பற்றிய கற்பனைகள் தவறாக உண்மைகளென்று மதிக்கப்படுகின்றன. ஒரு மனிதனுடைய ஆத்மா எவ்விதமான சுயநயத்தாலாவது மூடப்பட்டிருக்கும்போது, அவன் தனது ஆத்ம பகுத்தறிவின் சக்தியை இழந்து, அநித்தியப் பொருள்களை நித்தியப் பொருள்களாகவும், அழிந்துபோகும் பொருள்களை அழியாத பொருள்களாகவும், மரணமுடையவற்றை மரணமில்லாதனவாகவும், பொய்ப்பொருளை மெய்ப்பொருளாகவும் கருதுகிறான். இவ்வாறே உலகமானது மனித அநுபவத்தை ஆதாரமாகக்கொண்டிராத வெறுங் கற்பனைகளாலும் ஊகங்களாலும் நிறைக்கப்பட்டிருக்கின்றது. மாமிசத்தாலாய ஒவ்வொரு சரீரமும், அது பிறந்த நிமிஷம் முதற்கொண்டு, அதனை அழிக்கக்கூடிய அம்சங்களைக் கொண்டிருக்கின்றது; அதனுடைய மாற்றமுடியாத இயற்கைச் சட்டப்படி அஃது அழிந்தே தீரும்.

பிரபஞ்சத்திலுள்ள அழியும் பொருள்கள் ஒருபோதும் அழியாப் பொருள்களாக மாட்டா; அழியாப் பொருள்கள் ஒருபோதும் அழியமாட்டா; இறக்கும் உயிர்கள் ஒருபோதும் இறவா உயிர்களாக மாட்டா; இறவா உயிர்கள் ஒருபோதும் இறக்க மாட்டா; நிலையற்ற பொருள்கள் ஒருபோதும் நிலையுள்ள பொருள்களாக மாட்டா; நிலையுள்ள பொருள்கள் ஒருபோதும் நிலையற்ற பொருள்களாகமாட்டா; தோற்றங்கள் ஒருபோதும் உண்மைகளாகமாட்டா; உண்மைகள் ஒருபோதும் தோற்றங்களாகத் தேய மாட்டா; பொய்ப்பொருள் ஒருபோதும் மெய்ப்பொருள் ஆக மாட்டாது;

# கடவுளோடு ஐக்கியமாதல்.

மெய்ப்பொருள் ஒருபோதும் பொய்ப்பொருள் ஆகமாட்டாது. மனிதன் மாமிச உடம்பை அழியாத உடம்பாகச் செய்ய முடியாது; ஆனால், அதன் விருப்பங்களையெல்லாம் துறந்து, அதனை வென்று, அவன் அழியாத தன்மையுள் புகலாம்.

"கடவுள் ஒருவரே அழியாத் தன்மை வாய்ந்தவர்." பேரறிவாகிய கடவுட்டன்மையை அடைதலால் மாத்திரம் மனிதன் அழியாத் தன்மையுள் புகுகின்றான்.

கோடிக் கணக்கான உயிர்களது உடம்புகளின் இயற்கை மாறும் தன்மையது, அழியும் தன்மையது, நிலையற்றது; அவ்வியற்கையின் உண்மைத் தத்துவம் ஒன்றே நிலையுள்ளது. இயற்கை பல; அவற்றுள் ஒவ்வொன்றும் வேற்றுமை யுடையது. இயற்கையின் உண்மைத் தத்துவம் ஒன்றே; அஃது ஒற்றுமை யுடையது. புறப் பொறிகளையும் அகச் சுயநயத்தையும் வெல்வதனால், அஃதாவது இயற்கையை வெல்வதனால், மனிதன் தோற்ற மாத்திரையான சரீரத்திற்கு ஆதாரமான கருவிலிருந்து வெளிப்பட்டு, அழியக்கூடிய உருக்களெல்லாம் தோன்றுவதற்கு ஆதாரமான மெய்ப்பொருட் பிரதேசத்துள், ஆத்ம ஒளிக்குள், பறக்கிறான்.

ஆதலால், மனிதர்கள் தன்னை ('யான்' என்பதை) மறுத்தலை அப்பியசிக்கட்டும்; தங்களுடைய மிருக விருப்பங்களை வெல்லட்டும்; சுகத்திற்கும் இன்பத்திற்கும் தாங்கள் அடிமையாதலை மறுக்கட்டும்; அவர்கள் நல்லொழுக்கத்தை

அப்பியசித்துக் கடைசியாகக் கடவுட்டன்மையை அடையும் வரையில், மேலும் மேலும் உயர்ந்த ஒழுக்கத்தில் வளரட்டும்; பணிவு, சாந்தம், மன்னித்தல், இரக்கம், அன்பு இவற்றை அறிந்து அப்பியசிக்கட்டும்; இவ் வறிவும் அப்பியாசமுமே கடவுட்டன்மையை அடைதலாம்.

அருள் அகப் பார்வையை உண்டுபண்ணுகின்றது. எவன் தனது சரீரப்பற்றை வென்று, எல்லாப் பிராணிகளிடத்தும் அருளுடையவனா யிருக்கிறானோ, அவன் தெய்வத்தன்மை வாய்ந்த அகப் பார்வையை உடையவனாய்ப் பொய்யினின்று மெய்யைப் பிரித்து அறியும்படியான திறமையுடையவ னாகிறான். ஆதலால், மிக மேம்பாடுற்ற நல்ல மனிதன் ஞானியும், தேவனும், அறிஞனும், கடவுளை உணர்ந்தவனும் ஆகிறான். எவனிடத்தில் தளராத அமைதியையும், அசையாத பொறுமையையும், மேலான தாழ்மையையும், இனிய பேச்சையும், தன்னடக்கத்தையும், தன்னை-மறத்தலையும், ஆழ்ந்து நிறைந்த அநுதாபத்தையும் காண்கிறீர்களோ, அவனிடத்தில் மிக மிக உயர்ந்த ஞானத்தை எதிர்பாருங்கள்; அவனுடைய கூட்டுறவைக் கொள்ளுங்கள்; ஏனெனில், அவன் கடவுளை உணர்ந்துவிட்டான்; கடவுளுடன் வாழ்கின்றான்; கடவுளோடு ஐக்கியமாய் விட்டான். எவன் பொறுமையற்றவனா யிருக்கிறானோ, எவன் கோபிக்கிறானோ, எவன் தற்பெருமை பாராட்டுகிறானோ, எவன் இன்பத்தைப் பற்றிக்கொண்டிருக்கிறானோ, எவன் சுய நய போகங்களை விடுவதற்கு மறுக்கிறானோ, எவன் தயையையும் அன்ற இரக்கத்தையும் அப்பியசிக்கவில்லையோ,

அவனை நீங்கள் நம்பாதிர்கள்; ஏனெனில், அவனிடத்தில் ஞானம் இல்லை; அவனுடைய அறிவெல்லாம் பயனற்றது; அவனுடைய செயல்களும் சொற்களும் அழிந்துபோம்; ஏனெனில், அவை அழிந்துபோகக் கூடியவைதயே ஆதாரமாகக் கொண்டுள்ளன.

மனிதன் 'யான்' என்பதை விடக் கடவன்; உலகினை வெல்லக் கடவன்; சரீரப்பற்றை விடக்கடவன். இந்த வழியினால் மாத்திரமே கடவுளுடைய அகத்துட் பிரவேசிக்கக் கூடும்.

உலகமும், சரீரமும், தானும் காலமாகிய பாலை வனத்தில் தோற்றும் கானல் தோற்றங்கள்; ஆத்ம உறக்கத்தில் தோன்றும் அழிந்துபோகக்கூடிய சொர்ப்பனங்கள்; எவர்கள் அப்பாலை வனத்தைக் கடந்து விட்டார்களோ, எவர்கள் ஆத்ம விழிப்புடையவர்களா யிருக்கிறார்களோ, அவர்கள் மாத்திரம் எல்லாத் தோற்றங்களும் நீங்கிச் சொர்ப்பனமும் மயக்கமும் ஒழிந்து நிற்கும் சர்வ வியாபக மெய்ப்பொருளை உணர்ந்தவர்கள்.

ஒரு பெரிய சட்டம் இருக்கிறது; அது நிபந்தனையற்ற கீழ்ப்படிதலை வேண்டுகின்றது. ஓர் ஒற்றுமைத் தத்துவம் இருக்கிறது; அது சகல வேற்றுமைகளுக்கும் ஆதாரமானது. ஒரு நித்திய மெய்ப்பொருள் இருக்கிறது; அதில் உலகப் பிரச்சினைகளெல்லாம் தீர்ந்து விடுகின்றன. இந்தச் சட்டத்தை, இந்த ஒற்றுமையை, இந்த மெய்ப்பொருளை உணர்தல் அகண்டாகாரக் கடவுள் நிலையுட் பிரவேசித்து

நித்தியமான கடவுளோடு ஐக்கியமாதல். அன்பாகிய பெரிய சட்டத்தைப் பின்பற்றி ஒருவன் வாழ்க்கையை நடாத்துதல் அமைதியையும், சமாதானத்தையும், சாந்தியையும் அடைதற்கு வழி. தீமையிலும் பகைமையிலு முள்ள சகல சம்பந்தங்களையும் விடுதலும், நன்மையையும் நட்பையும் விடாமையும், அகத்துள் நிலவும் தூய அமைதிக்கு முற்றிலும் கீழ்படிந்து நடத்தலும், பொருள்களின் ஹிருதயத்தின் உள்ளுள்ளே பிரவேசித்தற்கும, வெறுமனே அறியும் அறிவுக்கு எட்டாத நித்திய அகண்ட தத்துவப் பொருளை உணர்ந்து வாழ்தற்கும் நெறிகளாம். இத் தத்துவத்தை உணரும் வரையில், ஆத்மா சாந்தி அடைய மாட்டாது. எவன் இத் தத்துவத்தை உணருகின்றானோ, அவன் உண்மை ஞானி. அவனுடைய ஞானம் கற்றவர்களுடைய ஞானம் அன்று. ஆனால்,ஒரு குற்றமற்ற ஹிருதயத்திற்கும் தெய்விக மனிதத் தன்மைக்கும் சொந்தமான நேர்மையாம்.

அகண்டாகாரமாயும் நித்தியமாயும் உள்ள கடவுளை உணர்தல், இருள் இராஜியமாகிய காலத்திற்கும் உலகத்திற்கும் சரீரத்திற்கும் மேற்பட்டு நிற்றலாம்; ஒளி இராஜியமாகிய அழியாமை, பரலோகம், ஆத்மா இவற்றில் தங்குதலாம். கடவுளோடு ஐக்கியமாதல் வெறும் பேச்சு அல்லது மனோபாவம் அன்று; அஃது அகத்தைத் தூய்மையாக்குவதற்காகச் சிரத்தையோடு செய்த அப்பியாசத்தின் பலனாகிய பிராணாதார அனுபவம். சரீரம் மனிதன் அன்று என நம்பப்பட்டபொழுது; சகல பசிகளும் விருப்பங்களும் முற்றிலும் கீழ்ப்பட்டுத் தூய்மை யாக்கப்பட்ட பொழுது,

மனோவெழுச்சிகள் ஓய்ந்து அமைதியான பொழுது; புத்தியின் தடுமாற்றம் நின்று சமநிலை அடைந்தபொழுது; தன் அறிவு கடவுளோடு ஐக்கிய மாகின்றது; அதுவரையில் நேர்மையான ஞானமும், நிலையான சாந்தியும் சித்திப்பதில்லை.

மனிதர் வாழ்க்கையில் இருண்டபிரச்சினைகளைப்பற்றிச் சிந்தித்துச் சிந்தித்துக் களைத்து, நரைத்து, அவற்றை ஒரு முடிவுக்குக் கொண்டுவராமலே இறந்து போகின்றனர்; ஏனெனில், அவர் தம் சரீரத்தின் சிற்றளவுள் அமிழ்த்தப் பட்டுச் சரீராபிமான இருளினின்று வெளிப்படுதற்கு வழி காண முடியாதவரா யிருக்கின்றனர். தன் சரீர உயிரைக் காப்பதற்கு விரும்பி, மனிதன் மெய்ப்பொருளாகிய சரீர மற்ற உயிரை இழந்துவிடுகிறான்; அழிந்துபோகும் பொருளைப் பற்றிக் கொண்டிருப்பதால், மெய்ப்பொருளின் ஞானத்தை அடைகிறான் இல்லை.

'யான்' என்பதை விடுவதால் எல்லாக் கஷ்டங்களும் ஜயிக்கப்படுகின்றன; அகத் தியாகத்தால் எரிக்கப்படாத பொய் எதுவும் பிரபஞ்சத்தில் இல்லை; தன்னைத் துறத்தலாகிய ஆராய்ச்சி விளக்கின்முன் தீர்ந்துபோகாத பெரிய பிரச்சினை எதுவும் இல்லை. பிரச்சினைகள் தன்னால் சிருஷ்டிக்கப்பட்ட தன்னுடைய சொந்தப் பிரமைகளிலே தங்குகின்றன; தன்னைத் துறந்தபோது அவை நீங்கிவிடுகின்றன. 'யான்' என்பதும், பொய் என்பதும் ஒரு பொருள் குறிக்கும் சொற்கள். 'யான்' என்பது அளக்கமுடியாத கோணல்களுள் சிக்கியுள்ளது; மெய்ப்பொருள் நித்திய

நேர்மையாக விளங்கும் பெருமை வாய்ந்தது. தன்னை நேசிக்கும் மனிதருக்கு மெய்ப்பொருள் மறைக்கப்பட்டிருக்கிறது; தம்முடைய சொந்த சரீர சுகத்தை நாடுவதால், அவர் மிக ஆழ்ந்ததும், மிகத் தூயதும், மிக நீடித்து நிற்பதுமான இன்பத்தை இழக்கின்றனர். மனிதரிடத்துச் சரீர சுகத்திலும் மேம்பட்ட இன்பம் ஒன்று இருக்கிறது. சுகம் இல்லாமல் மனிதன் இருக்கக் கூடும். அதற்குப் பதிலாக இன்பத்தைக் காணக் கூடும்; சுகத்தை நேசிக்காதேயுங்கள்; கடவுளை நேசியுங்கள்; கடவுள்தான் என்றும் நிலைத்திருக்கின்ற உள்பொருள்; அப் பொருளிடத்தில்தான் எல்லா வேற்றுமைகளும் ஒழிகின்றன; எவன் வேற்றுமை காணாது செய்கின்றானோ, நடக்கின்றானோ, அவனுக்கு எல்லாம் நன்மையாய் முடிகின்றது என்று கார்லைல் என்னும் பெரியார் கூறுகிறார்.

மனிதர் மிக மிக நேசிக்கிறதும், அவர் விடாப் பிடியாய் பிடித்துக் கொண்டிருக்கிறதுமான 'யான்' என்பதைத் துறந்துவிட்ட மனிதன், எல்லாக் கலக்கத்தையும் கடந்து, பொய்யும் மடமையுமாகிய வலையில் சிக்கியிருக்கிற உலகம் கூட எளிதில் காணக் கூடிய நேர்மைத் தன்மையில் புகுந்து விட்டான். அப்போது அவன் மிக மிக உயர்ந்த ஞானத்தை அடைந்தவனாய், அகண்டாகாரக் கடவுளிடத்தில் அமைதியுற்றிருக்கிறான். அவன் முயற்சி செய்யாமல் காரியசித்தி அடைகிறான். "எல்லாப் பிரச்சினைகளும் அவன் முன்னிலையில் தீர்ந்து போகின்றன. ஏனெனில், அவன் உண்மைப் பிரதேசத்தில் புகுந்து விட்டான். பொருள்களின்

மாறுகிற காரியங்களோடல்லாமல், பொருள்களின் மாருத காரணங்களுடன் பழகுகிருன். அவன் மிருகத்தன்மைக்கு மேற்பட்ட பகுத்தறிவு போன்றதும், தர்க்கத்திற்கு மேற் பட்டது மான ஞானத்தால் அறிவூட்டப் பட்டிருக்கிருன். தனது காமங்களேயும், தனது தவறுகளேயும், தனது அபிப் பிராயங்களேயும், தனது துரபிமானங்களேயும் விட்டுவிட்ட தனுல், அவன் சுவர்க்கத்தைப் பற்றிய சுயநய ஆசையையும் நரகத்தைப் பற்றிய மட அச்சத்தையும் கொன்று, கடவுள் ஞானத்தை அடைந்துவிட்டான்; உயிரின் மீதுள்ள அன்பையும் கூட விடுத்து, பிறப்பையும் இறப்பையும் ஒழிப் பதும், தனது மரணமற்ற தன்மையை அறிந்துள்ளது மான நித்திய உயிரையும் பேரின்பத்தையும் அடைந்துவிட்டான். ஒன்றும் பாக்கியில்லாமல் எல்லாவற்றையும் துறந்து விட்டதனுல், அவன் எல்லாவற்றையும் அடைந்து அகண் டாகாரக் கடவுளின் மார்பில் சாந்தியாய் அமர்ந்திருக்கிருன்.

தான் வாழ்வதிற்போலவே சாவதிலும், சாவதிற் போலவே வாழ்வதிலும், சமமான திருப்தியை அடையும் படியான விதத்தில் எவன் ' யான் ' என்பதை அடியோடு துறந்துவிட்டானே, அவன் கடவுளோடு ஐக்கியமாவதற்குத் தகுதியுடையவன். அழியக்கூடிய தன்னை நம்புவதை விடுத்து, அழியாத மேன்மையான நன்மை வடிவமாயுள்ள பெரிய சட்டத்தை அளவுகடந்து எவன் நம்புகிருனே, அவன் அழியாத பேரின்பத்தை அடையத் தயாராயிருக் கிருன்.

அத்தகைய மனிதனிடம் செய்ததற்கு இரங்கலாவது,

ஆசாபங்கமாவது, துன்பமாவது கிடையாது; ஏனெனில், சகல சுயநயமும் நீங்கின இடத்தில் இவ்வனுபவங்கள் இருக்க முடியா; அவனுக்கு என்னென்ன நேர்கின்றனவோ, அவையெல்லாம் அவனுடைய சொந்த நன்மைக்காகவே நேர்கின்றன வென்பது அவனுக்குத் தெரியும்; அவன் 'யான்' என்பதன் வேலைக்காரனு யிராமல், பரம்பொருளின் வேலைக்காரனு யிருப்பதால், அவன் எதிலும் திருப்தியா யிருக்கிறுன். பூமியில் உண்டாகும் மாறுதல்களால் அவன் பாதிக்கப் படுவதில்லை; அவன் யுத்தங்களைப் பற்றியும் யுத்தப் பிரஸ்தாபங்களைப் பற்றியும் கேள்விப்படுங் காலையில், அவனுடைய சாந்திக்குக் கேடு உண்டாவதில்லை. மனிதர் வெகுளியும், கடுகடுப்பும், கலகப் பிரியமும் கொள்ளும்போது, அவன் அவர்மீது இரக்கமும் அன்பும் கொள்ளுகிறுன். உலகின் நிலைமைகள் உலகாபிவிர்த்திக்கு மாருகத் தோன்றினும், உலகம் அபிவிர்த்தி அடைந்து கொண்டிருக்கிற தென்பதும்,

" தன்சிரிப் பாலும் தன்அழுகை யாலும்,
தன்வாழ் வாலும் தன்வைப் பாலும்,
தன்பிழை யாலும் தன்செய லாலும்,
பார்வை யிடத்திலும் பார்வைக் கப்புறமும்,
தொடக்க முதலா இறுதி வரையில்,
பலவறங் களாலும், பலமறங் களாலும்,
உலக மாகிய விலையுயர் பாவில்
அபிவிர்த்தி யென்னும் கடவுள் ஓடத்தின்
ஒளிரும் பொன்னூல் ஊடாய்
ஓடலும் வருதலும் ஒருங்குகொள் கின்றுன்"

என்பதும் அவனுக்குத் தெரியும்.

உக்கிரமான புயல்காற்று அடிக்கும்போது அதனை ஒருவரும் கோபிப்பதில்லை; ஏனெனில், அது விரைவில் போய்விடுமென்பது எல்லாருக்கும் தெரியும். வாதப் புயல்கள் உலகத்தை நாசமாக்கிக் கொண்டிருக்கும்போது, ஞானி மெய்ப்பொருளும் இரக்கமுமாகிய கண்களால்பார்த்து அவ்வாதம் நீங்கிவிடுமென்றும், உடைந்துபோன ஹிருதயங்களிலிருந்து அழியாத ஞானலயம் கட்டுப்படுமென்றும் அறிந்து கொண்டிருக்கிறான்.

கம்பீரமான பொறுமையும், அளவற்ற இரக்கமும் ஆழ்ந்த யோசனையும், மௌனமும், தூய்மையும் உடைய மனிதனைப் பார்த்தலே ஓர் ஆசீர்வாதம்; அவன் பேசும்போது அவனுடைய சொற்களை மற்றைய மனிதர் தமது உள்ளத்திற் கொண்டு சிந்திக்கின்றனர்; அச் சொற்களால் அவர் உயர்ந்த பதவிகளை அடைகின்றனர். அவன்தான் கடவுளோடு ஐக்கிய மானவன்; அவன்தான் மிக மிகப் பெரிய தியாகம் செய்து வாழ்க்கையின் மர்மங்களைத் தீர்ந்தவன்.

## சாந்திக்கு மார்க்கம்.

சுற்றிச் சுழலும் கிரியரா க்ஷசிபால்
வாழ்க்கை யோடு மர்ண்மெய்ப் பொருளையும்
விதியையும் பற்றி வினவியே அடைந்தேன்;
அறைந்தனள் அவள்இவ் வதிசய மொழிகளை:—
மறைக்கப் பட்டகண் களுக்கே மறைவுள;
கடவுள் வடிவினைக் கடவுளே காண்பான்."
மறைக்கப் பட்டஇம் மர்மத்தை அறியக்
கண்கள் காணா வொண்ணு வழியிலும்
மிகுதுயர் வழியிலும் வீணே சென்றேன்;
அன்பும் சாந்தியும் ஆகிய வழியை
நெருங்கினேன்; மறைவும் குருடும் நீங்கின;
கடவுட் கண்களால் கடவுளைக் கண்டேன்.

## முனிவர்களும், ஞானிகளும், இரக்ஷகர்களும். ஊழியம் புரிதல்.

பூரண வாழ்க்கையாக வெளிப்பட்டுள்ள அன்பின் தத்துவம், மனித உயிரின் கிரீடமும், மெய்ஞ்ஞானத்தின் அந்தமும் ஆகும்.

ஒரு மனிதனுடைய உண்மையின் அளவு, அவனுடைய அன்பின் அளவேயாகும்; எவனுடைய வாழ்க்கை அன்பினுல் ஆளப்படவில்லையோ, அவனுக்கு மிகமிகத் தூரத்தில் மெய்ப் பொருள் இருக்கிறது. சகிப்புத் தன்மை இல்லாதவரும், பிறரிடம் குற்றங் காண்பவரும், மிக மிக உயர்ந்த மதத்தின ராயினும், மிக மிகச் சிறிய அளவே மெய்ப்பொருளை உடைய வரா யிருக்கின்றனர்; பொறுமை யுடையவரும், எல்லாக் கக்ஷிகளையும் விருப்பு வெறுப்பு இல்லாமல் அமரிக்கை யாகக் கேட்பவரும், எல்லாப் பிரச்சினைகளையும் விவா தாம்சங்களையும் பற்றி ஆலோசித்துப் பக்ஷபாதமற்ற முடிவு செய்பவரும் முழு அளவில் மெய்ப்பொருளை உடையவரா யிருக்கின்றனர். ஞானத்திற்கு உரைகல் இதுதான்:— ஒரு மனிதன் எவ்வாறு வாழ்கிறுன்? அவன் எவ்விதத் தன்மையை வெளிக்காட்டுகின்றுன்? ஆபத்துக் காலத்தி லும் ஆசையெழும் காலத்திலும் அவன் எப்படி நடக்

கிருன்? வியாகுலத்தாலும், ஆசாபங்கத்தாலும், காமக் குரோதங்களாலும் இடை விடாது தள்ளாடிக் கொண்டும், முதலாவதாக வந்த ஒரு சிறு ஆபத்திலே அமிழ்ந்தும் போகிற அனேக மனிதர் தாம் மெய்ப்பொருளோடு வாழ் கிறதாகப் பெருமை பாராட்டுகின்றனர். என்றும் மாறு படாததா யிருப்ப தொன்றே மெய்ப்பொருள். ஒரு மனிதன் மெய்ப்பொருளைத் தனக்கு ஆதாரமாகக் கொண்டு வாழுங் காலையில், அவன் ஒழுக்கத்தில் உறுதியாய் நிற்கிருன்; தனது மனோ விகாரங்களுக்கும், மனோ வெழுச்சிகளுக்கும், அடிக்கடி மாறுதல் அடையும் சரீரத் தன்மைகளுக்கும் மேற்பட்டு நிற்கிருன்.

மனிதர் அழிந்து போகக் கூடிய கோட்பாடுகளை விதித்து அவைகளை மெய்ப்பொருள் என்று கூறுகின்றனர். மெய்ப்பொருளைக் கோட்பாடுகளாக விதிக்க முடியாது, மெய்ப்பொருள் வாக்குக்கு எட்டாதது; புத்திக்கும் எட்டா தது. அப்பியாசத்தால் அதனை உணரலாம். அது மாசற்ற ஹிருதயமாகவும், பூரண வாழ்க்கையாகவும் மாத்திரம் தோன்றக் கூடும்.

அப்படி யிருக்கும்போது யார், ஓய்வில்லாத மதங்கள், மடங்கள், கக்ஷிகள் இவற்றின் மத்தியில், மெய்ப்பொருளை உணர்ந்திருக்கின்ருர்? மெய்ப்பொருளாக வாழ்கின்றவரே அதனை உணர்ந்தவர். மெய்ப்பொருட் டன்மையை அப்பி யசிக்கின்றவரே அதனை உணர்ந்தவர். எவர் தன்னை வென்று, மதங்கள் முதலியவற்றிற்கு மேற்பட்டு, அவற்

றில் தலையிடாமல், சகல சண்டைகளிலும், சகல பக்ஷபாதங் களிலும், சகல குற்றஞ் சாட்டல்களிலும் நின்று விடுபட்டு, அமைதியோடும், அடக்கத்தோடும், சாந்தத்தோடும், தைரியத்தோடும் தூர இருந்துகொண்டு, தன்னுள்ளிருக் கிற சுயநய மற்ற சந்தோஷகரமான தெய்வ அன்பை எல்லாரிடத்திலும் செலுத்துகிறுரோ அவரே மெய்ப் பொருளை உணர்ந்தவர்.

எவன் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பொறுமை யுடைய வனுகவும், அமரிக்கை யுடையவனுகவும், இனிமை யுடையவ னுகவும், மன்னிப்பவனுகவும் இருக்கிறுனே, அவன்தான் மெய்ப்பொருளைக் காட்டுகிறுன்; வாக்கு வாதங்களாலும், உயர்ந்த நூல்களாலும் மெய்ப்பொருளைக் காட்ட முடியாது; ஏனெனில், மனிதர் அளவுகடந்த பொறுமையிலும், அழி யாத மன்னிப்பிலும், எல்லாவற்றையும் அடக்கிக் கொண் டிருக்கிற இரக்கத்திலும் மெய்ப்பொருளைக் காண வில்லை யானுல், அவருக்கு அதனைச் சொற்களால் காட்ட முடியாது. கோபக்காரர் தனிமையா யிருக்கும்போதும், சாந்தத்தின் மத்தியில் இருக்கும் போதும், அவர் அமைதியோடும், பொறுமையோடும் இருத்தல் எளிது. அதே மாதிரியாக, இரக்கமில்லாதவர் பிறரால் அன்பாக நடத்தப்படும்போது, பிறர்பால் அன்பும் இரக்கமும் உடையவரா யிருத்தல் எளிது. எவன் கோபம் மூட்டப்பட்ட சகல சமயங்களிலும் பொறு மையாகவும் அமைதியாகவும் இருக்கிறுனே, எவன் கோபம் அடையக்கூடிய சகல சந்தர்ப்பங்களிலும் அன்பும் இரக்க மும் உடையவனு யிருக்கிறுனே, அவன் மாசற்ற மெய்ப்

பொருளை உணர்ந்திருக்கிறான். இதுதான் உண்மை; ஏனெனில், அத்தகைய உயர் குணங்கள் கடவுளுக்குச் சொந்தமானவை. மிக மிக உயர்ந்த ஞானத்தை அடைந்தவனும், தனது அவாவையும், சுயநபத் தன்மையையும் துறந்தவனும், மேலானதும் மாறாததுமான மெய்ப்பொருளை உணர்ந்து அதற்குச் சரியாக நடக்கிறவனும் தான் அவ்வுயர் குணங்களை கைக்கொண்டிருத்தல் கூடும்.

ஆதலால், மெய்ப்பொருளைப்பற்றி வீணானவையும் ஆத்திரத்தோடு கூடியவையுமான சகல விவாதங்களையும் விடக்கடவர்; அவர் ஒற்றுமையையும், சமாதானத்தையும், அன்பையும், தயையையும் உண்டு பண்ணக் கூடிய பேச்சுக்களைப் பேசக் கடவர், செயல்களைச் செய்யக் கடவர். அவர் அக ஒழுக்கத்தை அப்பியசித்து, அடக்கத்தோடும் ஊக்கத்தோடும் மெய்ப்பொருளைத் தேடக் கடவர். மெய்ப்பொருள் தான் ஆத்மாவை எல்லாப் பாவங்களிலும் தீமைகளிலுமிருந்தும் மனித ஹிருதயத்தைக் கெடுத்து உலகத்தில் அலைந்து திரிகிற ஆத்மாக்களின் வழியை முடிவில்லாத இருளால் மறைக்கிற எல்லாவற்றிலுமிருந்தும் விடுவிக்கின்றது.

பிரபஞ்சத்திற்கு ஆதாரமும் காரணமுமான பெரிய சர்வ–வியாபகச் சட்டம் ஒன்று இருக்கிறது; அதுதான் அன்பாகிய சட்டம். அது வெவ்வேறு காலங்களிலும் வெவ்வேறு தேசங்களிலும் வெவ்வேறு பெயர்களால் சொல்லப்பட்டிருக்கிறது; ஆனால், அப்பெயர்களுக்கெல்லாம் பின்

பக்கத்தில் மாற்றமுடியாத அச் சட்டத்தை மெய்ப்பொருட் கண்ணால் காணலாம். பெயர்கள், மதங்கள், சரீரங்கள் மறைந்து போகின்றன; ஆனால், அன்பாகிய சட்டம் என்றும் அழியாமல் இருக்கின்றது. இச் சட்டத்தைப் பற்றிய ஞான த்தை அடைதல், அறிவோடு அதனுடன் ஒன்றுவதற்கும் மரணமின்மையையும், ஜனனமின்மையையும், அழிவின் மையையும் அடைதற்கும் மார்க்கம்.

இச் சட்டத்தை உணர்தற்காக ஆத்மா செய்யும் முயற்சியால், மனிதர் வாழ்வதற்கும், துன்புறுதற்கும், சாதற்கும் திரும்பித் திரும்பி வருகின்றனர்; அதனை உணர்ந்த பொழுது, துன்பம் ஒழிகின்றது; மனிதத்தன்மை மறைந்து போகின்றது; மாமிசத்தோடு கூடிய ஜனனமும் மரணமும் ஒழிகின்றன; ஏனெனில், ஆத்ம அறிவு மெய் யறிவோடு ஐக்கியமாய் விடுகின்றது.

மெய்ப்பொருள் ஒரு சரீரத்தைப் பற்றிய தன்று; மெய் பொருளின் மிக மிக வெளிப்பட்ட விளக்கம் உயிர்களுக்கு ஊழியம் புரிதல். தூயதான அகம் மெய்ப்பொருளை உணர்ந்தபொழுது, கடைசியான, மிக மிகப் பெரியதான, மிக மிகப் பரிசுத்தமான தியாகத்தை (அஃதாவது சரியாகச் சம்பாதித்த மெய்ப்பொருளின் அனுபவ தியாகத்தை)ச் செய்யும்படியாகக் கேட்கப்படுகிறது. இத் தியாகத்தைச் செய்வதால் தெய்வத் தன்மையை அடைந்துள்ள ஆத்மா, மாமிசத்தாலாய உடலைத் தாங்கி, மிக மிகத் தாழ்ந்தவர்கள் மத்தியிலும், அற்பர்கள் மத்தியிலும் சஞ்சரிப்பதில் திருப்தி யுடையதாய், மனித சமூகத்தின் ஊழியன் என்று

மதிக்கப்படுவதாய், மனிதர்களுள் வசிப்பதற்கு வருகின்றது. உலக இரக்ஷகர்களால் காட்டப்படும் மேலான அடக்கம் கடவுட்டன்மையின் முத்திரையாகும். எவன் 'யான்' என்பதை ஒழித்து, சரீரமற்ற, நித்தியமான, அளவற்ற அன்பின் அம்சமாக விளங்குகிறானோ, அவன் மாத்திரம் பின் சந்ததியார்களால் வணங்கப்படத் தக்கவனாகிறான். எவன் 'யான்' என்பதை ஒழித்தது மாத்திரமல்லாமல், சுயநய மற்ற அன்பை எல்லாரிடத்தும் செலுத்துதலாகிய தெய்வப் பணிவைக் கைக்கொண்டு ஒழுகுகிறானோ, அவன் அளவு கடந்து மதிக்கப்பட்டு, மனிதவர்க்கத்தாரின் அகங்களில் தெய்வமாக வசிப்பதற்கு இடம் கொடுக்கப் படுகிறான்.

பெரிய மதாச்சாரியர்க ளெல்லாம் சரீர சுகங்களையும், சௌக்கியங்களையும், பிரதிப் பிரயோஜனங்களையும் துறந்து, உலகச் செல்வங்களை யெல்லாம் விட்டு நீங்கி, சர்வ வியாபகமும் அகண்டாகாரமு மான மெய்ப்பொருளை உபதேசித்திருக்கிறார்கள். அவர்களில் ஒவ்வொருவருடைய வாழ்க்கைகளையும் உபதேசங்களையும் ஒப்பிட்டுப் பாருங்கள்; அவர்கள் வாழ்க்கையிலும் உபதேசத்திலும் ஒரே நேர்மையை, ஒரே தன்மறுப்பை, ஒரே பணிவை, ஒரே அன்பை, ஒரே சாந்தியைக் காண்பீர்கள். அவர்களெல்லாரும் ஒரே நித்தியக் கொள்கையை உபதேசித்தார்கள்; அக் கொள்கையைக் கைக்கொண்டு ஒழுகவே எல்லாத் தீமைகளும் அழிந்துபோம். மனித சமூகத்தின் இரக்ஷகர்களாகத் துதிக்கவும் தொழவும் பெற்ற பெரியார்கள் 'யான்' என்பது

இல்லாத பரம்பொருளின் அவதார புருஷர்கள். அவ்வாறு இருந்தமையால், அவர்கள் காமக் குரோதங்கள் அற்றவர்களாயும், பிறருக்கு உபதேசிப்பதற்கும், பிறரினின்று காப்பதற்கும், சொந்த அபிப்பிராயங்களும் கொள்கைகளும் இல்லாதவர்களாயும் இருந்தார்கள்; அவர்கள் எவரையும் தம் மதத்தில் சேர்க்கவாவது, பிற மதத்தில் சேரும்படி செய்யவாவது நாடினதில்லை. மிக மிக உயர்ந்த நன்மையிலும், மேலான பூரணத்துவத்திலும் வாழ்ந்து வந்தமையால், அவர்களுடைய முழு நோக்கமும் அந்த நன்மையை நினைப்பிலும், சொல்லிலும், செயலிலும் பிறரும் அநுசரிக்கும்படி செய்து மனித சமூகத்தை மேம்படுத்த வேண்டும் என்பதாகவே யிருந்தது. அவர்கள் சரீரத்தையுடைய மனிதனுக்கும் சரீர மற்ற கடவுளுக்கும் மத்தியில் நின்று, 'யான்' என்பதற்கு அடிமைப்பட்ட மனித வர்க்கத்தினரை இரக்ஷிப்பதற்காக உழைக்கின்ற உத்தமர்கள்.

'யான்' என்பதில் அமிழ்ந்தவராயும், சரீர மில்லாத நன்மை சொரூபமாய் விளங்குகிற கடவுளை அறியமுடியாதவராயும் இருக்கிற மனிதர், தம்முடைய இரக்ஷகர் தவிர மற்றைய இரக்ஷகர்களுக்கெல்லாம் தெய்வத்தன்மை இல்லையென்று சொல்லி, மனித வெறுப்பையும், கொள்கைத் தர்க்கத்தையும் உண்டுபண்ணுகின்றனர்; தமது சொந்த அபிப்பிராயங்களைச் சரியானவை யென்று அவர் வாதிக்குங் காலையில், மற்றவர்களை விக்கிரகாராதனைக்காரரென்றும், நாஸ்திகரென்றும், அவர்களுடைய வாழ்க்கைகள் பயனற்றவை யென்றும், தமது சொந்த ஆசிரியர்களுடைய வாழ்க்

கைகளுடையவும் உபதேசங்களுடையவும் தூய தன்மை யையும் சுயநயமற்ற அழகையும் பற்றிப் பேசுகின்றனர். மெய்ப்பொருளை அளவு படுத்த முடியாது; அஃது எந்த மனிதனுக்கும் எந்த ஆசிரியனுக்கும், எந்த தேசத்திற்கும் விசேஷ உரிமை யுள்ளதா யிருக்க முடியாது; 'யான்' என்பது பிரவேசித்தபொழுது, மெய்ப்பொருள் இழக்கப்பட்டது.

முனிவன், ஞானி, இரக்ஷகன் இவருடைய பெருமை இது:—அவன் மிக மிகத் தாழ்ந்த தாழ்மையையும், மிக மிக உயர்ந்த சுயநய மின்மையையும் அடைந்துவிட்டான்; எல்லாவற்றையும், அவனுடைய சொந்த சரீரத்தையுங்கூட, அவன் துறந்துவிட்டமையால், அவனுடைய செயல்களெல் லாம் தூயவையாயும் நிலையுள்ளனவாயும் இருக்கின்றன; ஏனெனில், அவை 'யான்' என்பதன் எவ்வகை மாசும் நீங்கினவையா யிருக்கின்றன. அவன் பிறருக்குக் கொடுக் கிறான்; அவன் பிறரிடமிருந்து கொள்வதற்கு ஒரு போதும் நினைப்பதில்லை; சென்றதற்கு இரங்காமலும், வருவதை எதிர்பாராமலும் அவன் வேலை செய்கிறான்; அவன் ஒரு போதும் பிரதிப் பிரயோஜனத்தைப் பார்ப்ப தில்லை.

விவசாயம் செய்வோன் தனது நிலத்தில் உழுது, உரம்போட்டு, விதைவிதைத்தபொழுது, அவன் தான் செய் யக்கூடியவற்றையெல்லாம் செய்து விட்டானென்றும், தான் பஞ்ச பூதங்களை நம்பியிருக்க வேண்டுமென்றும், தான் மகசூல் வருங் காலம் வரையில் பொறுமையா யிருக்க வேண்டுமென்றும், தான் எவ்வளவு ஆத்திரப்பட்டாலும் அது விளைவை எவ் வகையிலும் பாதிக்காதென்றும்

அறிவான். அதே மாதிரியாக, மெய்ப்பொருளை உணர்ந்த வன் பலன்களை எதிர்பாராமல் நன்மை, தூய்மை, அன்பு, சாந்தி என்னும் வித்துக்களை விதைத்துக் கொண்டே போகிறான்; உரிய காலத்தில் பலனைக் கொடுப்பதும் ஆக்கத்திற்கும் கேட்டிற்கும் மூலமு மாகிய அடக்கியாளும் பெரிய சக்தி இருக்கிற தென்பது அவனுக்குத் தெரியும்.

மனிதர் சுயநய மற்ற ஹிருதயத்தின் தெய்வ நேர் மையை அறியாது, தமது சொந்த இரக்ஷகனை ஒரு விசேஷ அவதார புருஷ னென்றும், பொருள்களின் இயற்கைக்கு முற்றிலும் வேறுபட்டவ னெனறும், அவனுடைய ஒழுக்க உயர்வு காரணமாக மனித வர்க்கத்தினரால் தீண்டப்படத் தகாதவ னென்றும் கருதுகின்றனர். மனிதன் தெய்வத் தன்மையில் பூரணத்துவம் அடையக் கூடு மென்பதிலுள்ள அவநம்பிக்கை, முயற்சியைத் தடுத்து, மனிதரின் ஆத்மாக் களைப் பாவஞ் செய்யும்படிக்கும் துன்பத்தை அனுபவிக்கும் படிக்கும் பலத்த கயிறுகளால் கட்டுகிறது. ஏசுநாதர் "ஞானத்தில் வளர்ந்தார்"; "துன்ப அனுபவத்தால் பூரணத்துவம் அடைந்தார்." ஏசுநாதர் எஃதா யிருந்தாரோ அஃதே யானார்; புத்தர் பெருமான் எஃதா யிருந்தாரோ அஃதே யானார்; ஒவ்வொரு பக்தனும் தன்னைத் துறத்தற் காகச் செய்த இடைவிடாத முயற்சியால் அவ்வாறானான். இவ் வுண்மையை அறிந்து கொள்ளுங்கள்; ஜாக்கிரதையான முயற்சியாலும், நம்பிக்கையோடு கூடிய உழைப்பாலும், உங்களுடைய கீழ்மையான இயற்கையை விட்டு மேல் எழலா மென்று உணர்ந்துகொள்ளுங்கள்; நீங்கள் அடையக்

கூடிய பதவியின் காட்சி பெரிதாயும் பெருமை வாய்ந்ததாயும் இருக்கும். புத்தர் பெருமான் தாம் பூரணத்துவத்தை அடையும் வரையில் தமது முயற்சிகளைத் தளர்த்துவதில்லையென்று உறுதி செய்துகொண்டார்; அவர் தமது காரிய சித்தியை அடைந்தார்.

முனிவரும், ஞானிகளும், இரக்ஷகர்களும் அடைந்த சித்திகளை, அவர்கள் சென்ற வழியிலே, அஃதாவது, தன்னைத் துறத்தலும், தன்னலம் மறுத்து ஊழியஞ் செய்தலுமாகிய வழியிலே, செல்லுவீர்களாயின், நீங்களும் அடையலாம்.

மெய்ப்பொருள் மிக நேர்மையானது. அது "யான் என்பதை விட்டுவிடு; என்னிடம் வா ; நான் உனக்கு அமைதியைத் தருகிறேன்" என்று கூறுகின்றது. அப் பொருளின்மேல் குவிக்கப்பட்டிருக்கிற வியாக்கியான மலைகளெல்லாம் ஒழுக்கத்தை உண்மையாக நாடிக்கொண்டிருக்கிற நெஞ்சத்தினின்று அதனை மறைக்க முடியாது. அதற்குக் கல்வி அவசியம் இல்லை; கல்வி இல்லாமலே அதனை உணரலாம். தவறிழைக்கும் தன்னை—நாடுகிற மனிதன் பல உருக்களைக் கொண்டிருந்தாலும், மெய்ப்பொருளின் அழகிய நேர்மையும் தெள்ளிய பிரகாசமும் மாறுபடாமலும் மங்காமலும் இருக்கின்றன; சுயநயமற்ற நெஞ்சம் அதன் ஒளிப் பிரதேசத்தில் புகுந்துஅதன் ஒளியை அடைகின்றது. சிக்கலான கோட்பாடுகளை உண்டுபண்ணுவதனல், நிச்சயமற்ற தர்க்கங்களைச் செய்வதனல், மெய்ப்பொருளை அடைய முடியாது; அகத் தூய்மையை உண்டுபண்ணுவதனல்,

மாசற்ற வாழ்க்கையை நடத்துவதனுல், மெய்ப்பொருளை அடையக் கூடும்.

இத் தூய நெறியில் செல்லுகிற மனிதன் தனது காமக் குரோதங்களை அடக்கத் தொடங்குகிறுன். இதுதான் ஒழுக்கம்; முனித்தன்மையின் தொடக்கம். முனித்தன்மை தூய்மையின் தொடக்கம். உலக வாழ்க்கையையே பற்றி யுள்ள மனிதன், தனது விருப்பங்களை யெல்லாம் அனுபவிக் கிறுன்; தான் வாழும் நாட்டின் சட்டத்திற்கு மாத்திரம் கீழ்ப்படிநது நடக்கிறுன்; ஒழுக்க முள்ள மனிதன் தனது காமக் குரோதங்களை அடக்குகிறுன்; முனிவன் தன் சொந்த அகத்துள்ளே மெய்ப்பொருளின் விரோதியாகிய 'யான்' என்பவனை அவனுடைய பலத்த அரணிலேயே தாக்கி, எல்லாச் சுயநய அசுத்த நினைப்புக்களையும் அடக்கு கிறுன்; எவன் காமக் குரோதங்களையும் அசுத்த நினைப்பு களையும் விட்டு, மலரானது மணத்தையும் நிறத்தையும் தன க்கு இயற்கையாகக் கொண்டிருத்தல்போல, நன்மையையும் தூய்மையையும் தனக்கு இயற்கையாகக் கொண்டுள்ளானே, அவனே தூய மனிதன். தூய மனிதன் தெய்வ ஞானத் தைக் கொண்டிருக்கிறுன்; அவன் மாத்திரம் மெய்ப்பொரு ளைப் பூரணமாக உணர்ந்து, நிலையான அமைதியிலும் சாந்தி யிலும் அமர்ந்திருக்கிறுன். அவனினின்று தீமையென்பது நீங்கி விட்டது; அது சர்வ நன்மையாகிய சர்வ வியாபக ஒளி யில் மறைந்துவிட்டது. தூய்மையானது ஞானத்தின் அடையாளம். அர்ஜுனனுக்குக் கிருஷ்ண பகவான் பின் வருகிறபடி உபதேசித்தார்:—

"அடக்கம், வாய்மை, அஹிம்சை, பொறுமை,
தகுதி, ஞானிகள் தம்மை மதித்தல்,
தூய்மை, தன்னிலை மாறு திருத்தல்,
பொறியின் பத்தை அடியோ டிகழ்தல்,
தன்னை அடக்கல், தன்னைத் துறத்தல்,
ஜனனம், மரணம், முதுமை, வியாதி,
பாவம், துயர்களில் தீமையைப் பார்த்தல்,
நல்ல விதியிலும், தீய விதியிலும்,
அமைதி யுடைய அகத்தோ டிருத்தல்,
பூரண ஆன்மக் காட்சியை அடைய
அசையா முயற்சிகள் அனுதினம் செய்தல்,
அதனை அடைதலால் ஆம்பயன் அறிதல்,
இவையே ஞானம்; இவையில் லாமையே
அஞ்ஞானம் என்றே அறிகுஇள அரசே."

எவன் தனது சொந்த சுயநயத்திற்கு விரோதமாக இடைவிடாது சண்டை செய்து, அதற்குப் பதிலாக எல்லாவற்றையும் தழுவும் பேரன்பை நிலை நாட்ட முயற்சிக்கிறானோ, அவன் ஒரு குடிசையில் வசித்தாலும் சரி, செல்வங்களோடும் செல்வாக்கோடும் வசித்தாலும் சரி, பிறருக்கு உபதேசித்தாலும் சரி, ஒருவரும் அறியாமல் அடங்கி யிருந்தாலும் சரி, உண்மை முனிவனாவன்.

மேலான காரியங்களைக் கோருவதற்குத் தொடங்குகிற ஒரு லௌகிகனுக்கு ஆஸிஸி நகரின் பிரான்ஸிஸ் என்னும் இனிய முனிவர், அல்லது அந்தோணி என்னும் வெற்றிப்

## ஊழியம் புரிதல்.

பிரதாப முனிவர், மனோ வுணர்ச்சியை உண்டுபண்ணுகிற ஒரு பெரியாராகத் தோன்றுகிறார். அம முனிவருக்கு, ஆசை அணுகாதவராய், பாவத்தையும் துக்கத்தையும் வென்றவராய், சாந்தியோடும் பக்தியோடும் இருக்கிற ஞானியானவர் ஆனந்தத்தை உண்டுபண்ணும் ஒரு பெரியாராகத் தோன்றுகிறார்; தம்முடைய அறிவைச் சுயநய மற்ற வேலைகளில் ஊக்கத்தோடு உபயோகித்துக்கொண்டு, துக்கத்தால் துடித்து மேற்செல்லக் கோருகிற மனித வர்க்கத்தினர்களின் அகங்களுள் அமிழ்ந்து, அவர்களுக்கு நன்மை செய்வதற்காகத் தமது தெய்வத்தன்மையின் வலிமையை உபயோகிக்கிற இரக்ஷகர் ஞானியினும் அதிகப் பெருமை வாய்ந்தவராக விளங்குகிறார்.

உண்மையான ஊழியமாவது, எல்லாரையும் நேசிப்பதில் தன்னை-மறத்தலும், எல்லாருக்கும் வேலை செய்வதில் தன்னை-இழத்தலுமே. பொய்ப் பொருள்களைப் பற்றிக்கொண்டு, உன்னைப்பற்றியும், உன் வேலையைப் பற்றியும், உனது பல தியாகங்களைப்பற்றியும், உனது சிறந்த தலைமையைப்பற்றியும் உரத்துப் பேசுகிற, உனது பல செயல்கள் உன்னைக் காப்பாற்றுமென்று நினைத்துக் கொண்டிருக்கிற வீணனே! மூடனே! இந்த விஷயத்தைத் தெரிந்து கொள்வாயாக; உனது புகழ் இவ் வுலகமெல்லாம் பரவி யிருந்தாலும், உனது செயல்களனைத்தும் வெறுந் தூளாய்ப் போம்; நீ மெய்ப்பொருள் இராஜியத்தில் அற்பனிலும் அற்பனாய்க் கருதப்படுவாய்.

'யான்' என்பது இல்லாதவனுடைய செயல்களே

நிலைநிற்கும்; 'யான்' என்பவனுடைய செயல்கள் சக்தியற்றவை, அழியக் கூடியவை. கடமைகள் எவ்வளவு தாழ்ந்தவையா யிருந்தாலும், அவற்றைச் சுயநயம் இன்றியும் சந்தோஷத்தோடும் செய்தபொழுது, அஃது உண்மையான ஊழியமும் அழியாத வினையும் ஆகின்றது. செயல்கள் எவ்வளவு உயர்ந்தவையாகவும் வெற்றிகரமாகவும் தோன்றினும், தன்னைப்பற்றிய அன்பு காரணமாகச் செய்யப்பட்ட இடத்தில், ஊழியச் சட்டத்தின் அஞ்ஞானம் இருக்கிறது. அவ்வாறு செய்யப்பட்ட செயல்கள் அழிந்துபோகின்றன.

உலகத்தாருக்கு ஒரு பெரிய தெய்வ பாடம் கொடுக்கப்பட்டிருக்கிறது; அப் பாடமாவது ஒரு சிறிதும் சுயநயம் இல்லாத தன்மை. பல காலங்களில் தோன்றிய முனிவரும், ஞானிகளும், இரக்ஷகரும் இப் பாடத்தைப் படித்து கற்றுத் தேர்ச்சி யடைந்தவர்களே. உலகத்திலுள்ள சகல மத வேதங்களும் இந்த ஒரு பாடத்தைக் கற்பிப்பதற்காகவே இயற்றப் பட்டுள்ளன; எல்லாப் பேராசிரியர்களும் இப் பாடத்தையே திரும்பித் திரும்பிச் சொல்லுகிறார்கள். இப் பாடத்தைக் கற்றுக்கொள்ளுதல் உலகத்தாருக்கு மிக மிக எளிது; அப்படி யிருந்தும், உலகத்தார் இப் பாடத்தை இகழ்ந்து, சுயநயத்தின் சிக்கலான வழிகளிற் சென்று தடுமாறுகிறார்கள்.

ஒரு தூய அகம் சகல மதங்களின் முடிவும், கடவுட் டன்மையின் தொடக்கமும் ஆகும். இவ் அகத்தூய்மையாகிய ஒழுக்கத்தை நாடுதல், மெய்ப்பொருட்கும் சாந்திக்கும் நெறியாகும். இந்த வழியில் செல்லுகிறவன், பிறப்

பிறப்புக்களுக்கு அப்பால்பட்ட அழியாப் பொருளை விரைவில் கண்டு, பிரபஞ்சத்தைப் பற்றிய கடவுட் கணக்கில் மிக மிகத் தாழ்ந்த முயற்சியும் விடப்பட மாட்டா தென்பதை உணர்வான்.

ஒரு கிருஷ்ண பகவானுடைய, ஒரு கௌதம முனிவருடைய, அல்லது ஓர் ஏசுநாதருடைய தெய்வத்தன்மை தன்னைத் துறத்தலின் பெருமை வாய்ந்த கிரீடமும், ஸ்தூல உலகத்திலும் மரணத்திலும் ஆத்மா செய்த யாத்திரையின் முடிவும் ஆகும். ஒவ்வோர் ஆத்மாவும் அம் மூவரையும் போலாகித் தனது தெய்வத்தன்மையின் ஆனந்தத்தை அநுபவிக்கும் வரையில், உலகம் தனது நீண்ட யாத்திரையை முடித்த தாகாது.

## சாந்திக்கு மார்க்கம்.

இடைவிடா முயற்சியால் எய்திய வுயர்ந்த
நிலைகள்மேல் பெருமைகள் நிலவிநின் றிடுங்காண்;
அரிய செயல்களை ஆற்றிய நவைத்த
தலையினைச் சுற்றுறும் புனிதநன் மதிப்பு;
பொன்னின் ஊதிய நன்னெறி தன்னில்
செல்வோன் தனக்குச் செல்வங்கள் வந்துறும்;
மேதைமை ஒளிரும் மூளை தன்னொடு
வினைசெய் வோனை மேவிடும் நற்புகழ்;
மிகைக்கும் தனக்கும் விரோத மாகப்
புரியும் இரத்தம் இலாத அமரில்
அன்புகா ரணமா ஆருயிர் ஈயும்
மனிதனை மன்னும் மிகப்பெருங் கீர்த்தி;
தன்னை வணங்கும் கண்ணிலா மாந்தரின்
இகழ்ச்சிக ளூடே முட்கிரீ டத்தை
ஏற்கும் மனிதனின் எழிற்புரு வத்தை
மிகமிக ஒள்ளிய மதிப்புகள் சுற்றுறும்;
மனித உயிர்களுக் கினிமை நல்கிட
அன்பும் வாய்மையும் ஆகிய நெறிகளில்
நடக்க முயலும் நல்ல மனிதனை
சிறந்த தூய செல்வங்கள் நண்ணும்;
மனிதர் களுக்கு நனிநல் லூழியம்
புரிவோன் அழியும் புகழினைக் கொடுத்தே
ஒளிரும் சுவர்க்க உடையுடன் ஒளியும்,
இன்பமும், சாந்தியும் எய்துகின் றனனே.

## பூரண சாந்தியை அடைதல்.

புறப் பிரபஞ்சத்தில் இடைவிடாத குழப்பமும், மாறுதலும், அமைதியின்மையும் இருக்கின்றன; எல்லாப் பொருள்களின் அகத்திலும் கலக்கப்படாத சாந்தி இருக்கின்றது; இவ் வாழ்ந்த மௌனத்தில் மெய்ப்பொருள் வசிக்கின்றது.

மனிதன் இவ் விரட்டைத்தன்மையைக் கொண்டிருக்கிறான்; புற அமைதியின்மையும், ஆழ்ந்த நித்திய சாந்தியும் ஆகிய இரண்டும் மனிதனுள் இருக்கின்றன.

மிக மிகக் கொடிய புயல் காற்றும் செல்ல முடியாத மௌன ஆழங்கள் சமுத்திரத்தில் இருப்பதுபோல, பாவமும் துக்கமு மாகிய புயல் காற்றுக்கள் ஒருபோதும் கலக்க முடியாத தூய மௌன ஆழங்கள் மனிதனுடைய அகத்தில் இருக்கின்றன. இந்த மௌனத்தை அடைந்து, அதில் அறிவோடு வாழ்தலே சாந்தி.

புற உலகத்தில் வேற்றுமை நிறைந்திருக்கிறது; ஆனால், பிரபஞ்சத்தின் அகத்தில் உடைக்கப்படாத ஒற்றுமை நிறைந்திருக்கிறது. மனித ஆத்மா, வேற்றுமையான மனோ வெழுச்சியாலும் துயரத்தாலும் கிழிக்கப்பட்டு, பாவமற்ற நிலைமையாகிய ஒற்றுமைக்குக் குருட்டுத்

தனமாகப் போய்ச் சேர்கின்றது; இந்த நிலைமையை அடைந்து, அதில் அறிவோடு வாழ்தல்தான் சாந்தி.

வெறுப்பு மனித உயிர்களைப் பிரித்து, துன்பப்படுத்தலை வளர்த்து, தேசங்களைக் கொடுமையான யுத்தத்தில் புகுத்தி விடுகின்றது. அப்படியிருந்தும், மனிதர் எல்லாவற்றையும் தழுவிக்கொண்டிருக்கிற ஒரு பூரண அன்பினிடத்தில் ஒரு சிறிய அளவு நம்பிக்கை மாத்திரம் உடையவரா யிருக்கின்றனர்; இதற்குரிய காரணம் அவருக்குத் தெரிவதில்லை; இந்த அன்பை அடைந்து, அதில் அறிவோடு வாழ்தல்தான் சாந்தி.

இந்த அகச்சாந்தி, இந்த மௌனம், இந்த ஒற்றுமை, இந்த அன்பு தேவராஜ்யம்; இந்த இராஜ்யத்தைச் சேர்தல் மிகக் கஷ்டமாயிருக்கிறது; ஏனெனில், தன்னைத் துறந்து சிறு குழந்தைகள்போல் ஆவதற்குச் சித்தமாயிருக்கிறவர் ஒருவரும் இல்லை.

முத்தி வீட்டின் சித்திர வாயில்
மிகவொடுங் கியது; சிறியது; அதனை
உலகப் பிராந்தியால் குருடாா யுள்ள
மூட மனிதரால் காணமுடி யாது;
வாயிலைக் கண்டுளே போக நாடும்
கூரிய பார்வை யாளரும் வாயில்
கதவுதாழ் இடப்பட்டி ருப்பதும், திறக்க
முடியா ததுவும் நனிகாண் கின்றனர்;
கதவினுட் புறமுள கனத்த தாழ்கள்
அவா, தற் பெருமை, பேராசை, காமமே.

# பூரண சாந்தியை அடைதல்.

சாந்தி! சாந்தி! என்று மனிதர் சத்தம் இடுகின்றனர்; ஆனால், அதற்கு எதிராக, வேற்றுமையையும், அமைதியின்மையையும், சச்சரவையும் காண்கின்றனர். தன்னைத் துறத்தலினின்று பிரிக்கமுடியாத ஞானத்திற்கு வேறாக உண்மையானதும் நிலைநிற்கத்தக்கதுமான சாந்தி இருக்க முடியாது.

ஜன சமூக சௌகரியங்களாலும், கணத்திற் கழிந்து போம் சிற்றின்பங்களாலும், லௌகிகக் காரியங்களின் வெற்றிகளாலும் உண்டாகும் சாந்தி, அதன் இயற்கையிலேயே, நிலையற்றது; ஆபத்துக் காலத்தில் அழிந்து போகின்றது. முத்தியின் சாந்தி மாத்திரம் எல்லா ஆபத்துக்களிலும் அழியாது நிலைநிற்கின்றது; சுயநய மற்ற அகம் மாத்திரம் முத்தியின் சாந்தியை அடையக் கூடும்.

தூய்மை ஒன்றே அழியாத சாந்தி; தன்னை-அடக்கல் அதற்கு வழி; மேன்மேலும் வளர்ந்து கொண்டிருக்கிற ஞான ஒளி யாத்திரிகனை அவன் வழியில் நடத்துகின்றது. ஒழுக்க நெறியில் பிரவேசித்தவுடனே அவ்வொளி சிறிது அடையப் படுகின்றது; ஆனால், அது 'யான்' என்பது ஒழிந்த ஒரு மாசற்ற வாழ்க்கையிலே பூரணமாக அடையப் படுகின்றது.

தன்னைநேசிக்கும் தவறையும் வாழ்க்கையிற்
கொண்டுள ஆசைக் கூரையும் வெல்லலும்,
ஆழ்ந்தகா மத்தை அகத்தைவிட் டோட்டலும்,
அகச்சச் சரவை அகத்தினின் றகற்றலும்
உண்மைச் சாந்தியை உண்டாக் கும்மே.

## சாந்திக்கு மார்க்கம்.

வாசிப்பவர்களே! ஒருபோதும் மங்காத ஒளியையும் ஒருபோதும் முடிவுறாத ஆனந்தத்தையும் அசைக்கமுடியாத சாந்தியையும் அனுபவிக்க விரும்புவீர்களாயின்; உங்கள் பாவங்களையும், உங்கள் துக்கங்களையும், உங்கள் கவலைகளையும், உங்கள் குழப்பங்களையும் அடியோடு விட விரும்புவீர்களாயின்; இவ்விரக்ஷிப்பையும், இவ்வுயர்ந்த பெருமை பொருந்திய வாழ்க்கையையும் அடைய விரும்புவீர்களாயின்; உங்களை நீங்கள் வெல்லுங்கள். ஒவ்வொரு நினைப்பும், ஒவ்வொரு மனோவெழுச்சியும், ஒவ்வொரு விருப்பமும் உங்களுள் வசிக்கின்ற தெய்வ சக்திக்குப் பூரணமாகக் கீழ்ப்படியுமாறு செய்யுங்கள். இதைத் தவிர சாந்திக்கு வேறு வழி இல்லை; இதன் மூலமாக நடப்பதற்கு நீங்கள் மறுப்பீர்களாயின், நீங்கள் அதிகமாகச் செய்யும் பிரார்த்தனையும், நீங்கள் மதச் சடங்குகளைச் சரியாகச் செய்தலும், பயனற்றவையாயும் உபயோகமற்றவையாயும் தீரும். தேவர்களாவது, தேவ தூதர்களாவது உங்களுக்கு உதவி செய்ய முடியாது. 'யான்' என்பதை வென்றவனுக்கு மட்டும்தான் அவனுடைய புதியதும் அழியாததுமான பெயர் எழுதப்பட்ட நல்ல வாழ்க்கை நல்கப் படுகின்றது.

புறப்பொருள்களிலிருந்து, பொறியின்பங்களிலிருந்து, புத்திவாதங்களிலிருந்து, உலகக் கிளர்ச்சிகளிலும் சந்தடிகளிலுமிருந்து, சிறிது நேரத்திற்கு வெளியே வாருங்கள்; உங்கள் அகங்களின் உள்ளுள்ளேயிருக்கிற அரங்குட் செல்லுங்கள்; அங்கே சகல சுயநய விருப்பங்களின் அசுத்தப் பிரவேசங்களினின்றும் விடுபட்டு, ஓர் ஆழ்ந்த

மௌனத்தை, ஒரு தூய அமைதியை, ஓர் இன்பகரமான வாழ்வைக் காண்பீர்கள்; அந்தத் தூய இடத்தில் நீங்கள் சிறிதுநேரம் ஓய்வாயிருந்து தியானம் செய்வீர்களாயின், மெய்ப்பொருளின் குற்றமற்ற ஞானக்கண் உங்களுள்ளே திறக்கும்; பொருள்களை யெல்லாம் அவற்றின் உண்மை யான தன்மையில் நீங்கள் பார்ப்பீர்கள். உங்கள் உள்ளே யிருக்கிற இந்தத் தூய இடம் உங்களுடைய உண்மையான அழிவில்லாத ஆத்மா. அஃது உங்கள் உள்ளே இருக்கிற தெய்வம்; நீங்கள் அதுவான பொழுது, "சரியான மன உடையைத் தரித்திருக்கிறீர்கள்" என்று சொல்லப்படு வீர்கள். அதுதான் சாந்தியின் வீடு; ஞானத்தின் கோவில்; மரணமின்மையின் வாஸஸ்தானம். இந்த உள் நோக்கிய ஓய்விடத்திற்கு, உண்மைக் காட்சி மலைக்கு, வேருக உண் மைச் சாந்தியாவது, மெய்ஞ்ஞானமாவது, இருக்கமுடியாது; அந்த இடத்தில் நீங்கள் ஒரு நிமிஷம், ஒரு மணி, ஒரு நாள், தங்கமுடியுமானால், அங்கு நீங்கள் எக்காலத்திலும தங்கி யிருக்க முடியும்.

உங்களுடைய சகல பாவங்களும், துக்கங்களும், உங்க ளுடைய சகல அச்சங்களும் கவலைகளும் உங்களுக்கே சொந்தமானவை; அவற்றை நீங்கள் பற்றிக்கொண்டிருக்க, அல்லது விட்டுவிட, முடியும். உங்கள் சொந்த விருப்பப்படி உங்கள் அமைதியின்மையைப் பற்றிக் கொள்ளுங்கள்; அல்லது உங்கள் சொந்த விருப்பப்படி நிலையான சாந்தியை அடையுங்கள். பாவத்தை உங்களுக்காக வேறொருவர் விடமுடியாது; அதனை நீங்கள்தான் விடவேண்டும். மிக

மிகப் பெரிய ஆசிரியரும் தமக்காக மெய்ப்பொருள் வழியில் நடப்பதையும், அவ் வழியை உங்களுக்குக் காட்டுவதையும் தவிர அதிகமாக ஒன்றும் செய்ய முடியாது; உங்களுக்காக நீங்கள்தான் அவ் வழியில் நடக்க வேண்டும். சாந்தத்தைக் கெடுப்பதும், ஆத்மாவைப் பந்தப்படுத்தி யிருப்பதுமான கட்டை உங்கள் சொந்த முயற்சிகளாலே அவிழ்த்து, நீங்கள் விடுதலையும் சாந்தியும் அடைய முடியும்.

தெய்வ சாந்தி, தெய்வ ஆனந்தம், இவற்றின் தேவ தூதர்கள் உங்கள் பக்கத்திலே எப்பொழுதும் இருக்கிறூர் கள்; நீங்கள் அவர்களைக் காணுததற்கும், அவர்கள் பேச்சைக் கேளாததற்கும், அவர்களோடு வசியாததற்கும் காரணம், நீங்கள் அவர்களினின்று ஒளிந்து கொண்டு, உங்கள் உள்ளத்திலிருக்கிற தீய பிசாசுகளின் கூட்டுறவை விரும்புவதே.

நீங்கள் எவ்வாறிருக்க ஆசை கொண்டுள்ளீர்களோ, நீங்கள் எவ்வாறிருக்க விரும்புகிறீர்களோ, நீங்கள் எவ்வாறிருக்க கோருகிறீர்களோ, அவ்வாறிருக்கின்றீர்கள். உங்களைத் தூய்மைப்படுத்த நீங்கள் தொடங்கலாம்; அவ்வாறு செய்வதனுல் நீங்கள் சாந்தியை அடையலாம்; அல்லது உங்களைத் தூய்மைப் படுத்த நீங்கள் மறுக்கலாம்; முன் போலவே, துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கலாம்.

நீங்கள் புறப்படுங்கள்; வாழ்க்கையின் காய்ச்சலையும் எரிச்சலையும் விட்டு வெளியே வாருங்கள்; 'யான்' என்

பதன் சுடுகிற வெப்பத்தை விட்டு வெளியேறுங்கள்; உங்களை அமைதிப்படுத்தி, புதுப்பித்து, மீட்டும் சாந்தியின் காற்றுக்கள் வீசுகின்ற அகத்தின் அமைதியிடத்துள் புகுங்கள்.

பாவமும் துன்பமுமாகிய புயல்களை விட்டு வெளியே வாருங்கள். சாந்தியாகிய முத்தி வீடு அவ்வளவு சமீபத்தில் இருக்கும்போது, ஏன் தொந்தரைப் படுகின்றீர்கள், புயலிற் சுழலுகின்றீர்கள்?

தன்னை நாடுதலை யெல்லாம் விட்டு விடுங்கள்; தன்னை விட்டு விடுங்கள்; உடனே கடவுட் சாந்தி உங்களுடையதாய் விட்டது.

உங்களுள் இருக்கிற மிருகத்தைக் கீழ்ப்படுத்துங்கள்; ஒவ்வொரு சுயநய எழுச்சியையும் ஒவ்வொரு வேற்றுமைச் சொல்லையும் வெல்லுங்கள்; உங்களுடைய சுயநய சுபாவத்தின் தாழ்ந்த உலோகங்களை அன்பாகிய கலப்பற்ற தங்கமாக மாற்றுங்கள்; பூரண சாந்தி வாழ்க்கையை நீங்கள் அடைவீர்கள். வாசகர்களே! இவ்வாறு கீழ்ப்படுத்தி, வென்று, மாற்றி, நீங்கள் ஸ்தூல சரீரத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் போதே மரணமாகிய கருங் கடலைக் கடந்து, துக்கப் புயல்கள் ஒருபோதும் அடியாத, பாவமும், துன்பமும், சந்தேகமும் அணுகாத, கரையை அடைவீர்கள். அந்தக் கரை மீது தூய்மை, இரக்கம், விழிப்பு, தன்னடக்கம், முடிவற்ற சந்தோஷம் இவற்றோடு நின்று கொண்டு, நீங்கள்

"என்றும் ஆத்மா பிறந்த தில்லை;
என்றும் ஆத்மா இலாதுபோ காது;
அஃதிலாக் காலம் இலதொரு போதும்;
தொடக்கமும் முடிவும் சொர்ப்பனம் தாமே;
பிறப்பும் மாற்றமும் இறப்பும் இன்றி
என்றும் ஆத்மா இருக்கின் றதுகாண்.
அஃதுறை வீடிவண் அழிந்ததாத் தோன்றினும்
அஃதொரு போதும் அழிந்த தில்லையே"

என்று அறிவீர்கள்.

அப்போது, நீங்கள் பாவம், துக்கம், துன்பம், என்பவற்றின் அர்த்தத்தையும், அவற்றின் அந்தம் ஞானம் என்பதையும் அறிவீர்கள்; இருப்பின் காரணத்தையும் காரியத்தையும் அறிவீர்கள்.

இவ்வறிவுடன் நீங்கள் ஒய்வில் புகுவீர்கள்; இதுதான் அழியாத ஆனந்தம்; இதுதான் மாறாத சந்தோஷம்; இது தான் தடையற்ற அறிவு, மாசற்ற ஞானம், இறவாத அன்பு; இது, இதுமாத்திரமே, பூரண சாந்தி அனுபவம்.

## பூரண சாந்தியை அடைதல்.

மெய்ப்பொருள் உணர்ந்த மேலோர் களுக்குக்
கற்பிக்க விரும்பும் கருத்துடை யீரே!
ஐயம் என்னும் அரும்பா லேயில்நீர்
நடந்து சென்று கடந்துவிட் டீரா?
துக்க நெருப்பால் தூயரா யினீரா?
அபிப்பி ராய அலகையை இரக்கம்
மனத்தி னின்று துரத்தி விட்டதா?
பொய்நினைப் புக்கள் புகுந்தொளி யாவகை
நும்முடை ஆன்மா நல்லதா யிற்று?

அன்பைக் கொண்ட அறிவுடை யோர்க்குக்
கற்பிக்க விரும்பும் கருத்துடை யீரே!
ஏங்கி யழுதிடும் இடத்தில் நீவிர்
நடந்து சென்று கடந்துவிட் டீரா?
வியாகுலம் என்னும் இருளிராத் திரியில்
அழுது நொந்துநீர் அதுகழித் தீரா?
பிணையும் வெறுப்பும் இடைவிடாப் பாரமும்
கொண்டு வருந்தும் குவலய மக்களைக்
கண்டுளம் உருகிநீர் கருணையுற் றீரா?

சாந்தி யடைந்த மாந்தர் தமக்குக்
கற்பிக்க விரும்பும் கருத்துடை யீரே!
சச்சர வென்னும் மிக்க அகன்ற
கடலினை நீவிர் கடந்துவிட் டீரா?
மோனக் கரையில் வாழ்க்கையின் கொடிய
அமைதி யின்மையை அறிந்துநீர் விடுதலை
பெற்றுவிட் டீரா? பெரியநும் அகத்தில்
வருந்துத லெல்லாம் மாய்ந்தொழிந் தனவா
வாய்மையும் அன்பும் சாந்தியும் நிற்கவே?

சாந்திக்கு மார்க்கம் முற்றிற்று.

வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 19 | 14 | தியானம | தியானம் |
| 32 | 24 | கிள்றனர் | கின்றனர் |
| 34 | 24 | நாம | நாம் |
| 45 | 23 | பறக்கும | பறக்கும் |
| 46 | 11 | நீத்து) | நீத்(து) |
| 48 | 22 | வளர்க | வளர்க்க |
| 51 | 1 | யார்ய ர் | யார்யார் |
| 51 | 13 | நினைக்கும | நினைக்கும் |
| 55 | 1 | நீஙகள் | நீங்கள் |
| 63 | 11 | ணிடத்து | ளிடத்து |
| 67 | 9 | உள்ளுற | உள்ளுர |
| 68 | 25 | அம | அம் |
| 70 | 20 | உறுகினறாய் | உறுகின்றாய் |
| 72 | 5 | எரிகது | எரிந்து |
| 73 | 6 | மறறவ | மற்றவ |
| 74 | 9 | தெரிகது | தெரிந்து |
| 76 | 11 | இநத | இந்த |
| 79 | 5 | கறைப்ப | கரைப்ப |
| 79 | 18 | தோ, தோ | வோ, வோ |
| 83 | 4 | அறிய | அறி |
| 89 | 4 | ஞானமும | ஞானமும் |
| 89 | 22 | கினறன | கின்றன |
| 89 | 22 | கினறன | கின்றன |
| 92 | 5 | அவள் | அவன் |
| 96 | 18 | தோன்றக | தோன்றக் |
| 100 | 10 | மதிக்கப்படடு | மதிக்கப்பட்டு |
| 103 | 10 | ெனனறும் | னென்றும் |

...ட்டு-அரும்பத உரையுடன். இஃது, ஆன்ம ...னத்தையும், ...வுள் ஞானத்தையும், உலக அறிவையும், நல்லொ ...கங்களையும் அடையச் செய்வனவும், பலபேர்களுக்கு எழுதியனுப் ...னவு மான பல வகைப் பாக்கள் பல நூறு கொண்டது. ...ன் விலை அணா 12.

வள்ளியம்மை சரித்திரம்—அரும்பத உரையுடன். இஃது ...து முதல் மனைவியின் சரித்திரம்; ஸ்திரீ புருஷர்கள் தத்தம் ...ழ்க்கைத் துணையாரிடத்தும் உற்றாரிடத்தும் மற்றாரிடத்தும் அது ...க்க வேண்டிய முறைகளை உணர்த்தும் 216 நேரிசை வெண்பாக் ...ள உடையது. இதன் விலை அணா 8.

இன்னிலை— மூலமும் உரையும். இரண்டாம் பதிப்பு. இது ...பதினெண்கீழ்க் கணக்கில் ஒன்று; பொய்கையாழ்வாரால் இயற்றப் ...பெற்றது; அறப்பால், பொருட்பால், இன்பப்பால், வீட்டுப்பால் என் ...ம் நான்கு பகுதிகளை யுடையது; பல உரையாசிரியர்களால் எடுத் ...ளப் பெற்றது. இதன் விலை ரூ. 1.

திருக்குறள்—மணக்குடவருரை. இவ்வுரை திருக்குறளுக்கு ...ரைகண்ட பதின்மர் உரைகளுள் ஒன்று; பரிமேலழகர் உரைக்கு ...க முற்பட்டது; "தேவருரை" என்னும் சிறப்புப்பெயர் பெற்றது; ஆசிரியர் கருத்துக்களை அமைவுற விளக்குவது; எவரும் எளிதிற் கற்கத் தக்கது.

அறத்துப்பால். ரூபா. 1—0—0.

தொல்காப்பியம்—இளம்பூரணம். இவ்வுரை தொல்காப்பிய உரைகள் ஆறனுள்ளும் முந்தியது; ஆசிரியர் கருத்துக்களை அழகுற விளக்குவது. இவ்வுரையாசிரியர் "இளம் பூரண அடிகள்" என்றும், "உரையாசிரியர்" என்றும் சிறப்பித்து கூறப் பெற்றவர்.

| | |
|---|---|
| எழுத்ததிகாரம்-ராயல் 8 பக்கப் பாரம் 21 கொண்டது. | ரூ 1–8–0 |
| பொருளதிகாரம்-அகத்திணையில், புறத்திணையியல். | ரூ 1–0–0 |
| ஷை களவியல், கற்பியல், பொருளியல் | ரூ 1–12–0 |
| ஷை மற்றை இயல்கள் — | (அச்சில்.) |

எனது அரசியல் பெருஞ்சொல்:- சேலம் ஜில்லா மூன்றாவது அரசியல் மகாநாட்டின் தலைவனாக யான் படித்த உபந்யாசம். சுய அரசாட்சி இன்னது எனவும், அதனை நாம் அடைவதற்குரிய வழிகள் இன்னவை எனவும் இதில் மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. இதன் விலை அணா 8.

## எனது நூல்களும் பிரசுர[illegible]

| நூல். | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| மனம் போல வாழ்வு—நான்காம் பதிப்பு | | 0 | [illegible] | 0 |
| அகமே புறம்—[illegible]ரும் பதிப்பு | ... | 0 | 8 | 0 |
| வலிமைக்கு மார்க்கம்—இரண்டாம் பதிப்பு | ... | 0 | 12 | 0 |
| சாந்திக்கு மார்க்கம்—[illegible] | ... | 0 | 12 | 0 |
| மெய்யறிவு—மூலமும் உரையும் | ... | 0 | 12 | 0 |
| மெய்யறம்—அரும் பத வுரையுடன் | ... | 0 | 8 | 0 |
| எனது பாடற் றிரட்டு | ... | 0 | 12 | 0 |
| வள்ளியம்மை சரித்திரம்—அரும் பத வுரையுடன் | ... | 0 | 8 | 0 |
| இன்னிலை—மூலமும் உரையும்—இரண்டாம் பதிப்பு | ... | 1 | 0 | 0 |
| திருக்குறள்—மணக்குடவருரை—அறத்துப்பால் | ... | 1 | 0 | 0 |
| தொல்காப்பியம்—இளம்பூரணம்—எழுத்ததிகாரம் | ... | 1 | 8 | 0 |
| ஷை ஷை பொருளதிகாரம்—அகப்புறத்திணைகள் | ... | 1 | 0 | 0 |
| ஷை ஷை களவியல், கற்பியல், பொருளியல் | ... | 1 | 12 | 0 |
| எனது அரசியல் பெருஞ்சொல் | ... | 0 | 8 | 0 |



தூத்துக்குடி,
திருநெல்வேலி ஜில்லா.

வ. உ. சிதம்பரம் பிள்ளை,
வக்கீல்.

வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி.